Registered No. M. 1500. "NAVASAKTI"

# நவசக்தி

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

சந்தா விவரம்

| | ரூ. அ. |
|---|---|
| வருட சந்தா ... | 5 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 0 |
| வெளிநாடு—வருடசந்தா | 6 0 |

விளம்பர விகிதம்

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு கக — பிரசோற்பத்திஸு ஆடிமீ எஉ (22—7—31) புதன்கிழமை — பரல் ந௩



## தமிழ் நாடு

வேங்கடமே தென்குமரி வேலையெல்லை நாடு
மென்மைகனி இனிமைகன்னி மேன்மைமொழி நாடு
தேங்கமழும் பொதிகைர் தென்றலுமிழ் நாடு
திருமலைகள் தொ ள தெய்வமலை நாடு
பாங்குபெ விபெண் ரவைபொன்னி நாடு
பாவளர்ந்த வைகையொடு பழம்பொருநை நாடு
தேங்குசுனை பளிங்கருவி தெளிசாரல் நாடு
சிற்றோடை கால்பரந்த செய்யதமிழ் நாடே. (க)

போங்குபசுங் காடணிந்து பொழிலுடுத்த நாடு
பூங்கொடியின் செடிவனங்கள் பூண்டுபொலி நாடு
தெங்குபனை கன்னலொடு கமுகுசெறி நாடு
செவ்வாழை மாபலவின் தேன்சொரியு நாடு
தங்கமெனு மூலிகைகள் தாங்கிநிற்கு நாடு
தாயனைய வோவகை தாதுவளர் நாடு
செங்கதிர்நெல் வரகுதினைச் செல்வம்விளை நாடு
சீர்பருத்தி நார்மரங்கள் சிறந்ததமிழ் நாடே. (உ)

மடைகளிலே வாளைபாய மா ருளு நாடு
மழைமுழங்க மயிலாட வண்டுபாடு நாடு
புடைகூவுங் குயில்கீதம் புசித்தினிக்கு நாடு
பூவைபுகல் கிளிமழலை பொருந்தமிழ்த நாடு
படைமூங்கில் வெள்வளைகள் பாண்மிழற்று நாடு
பறவையலை ஓயாது பாடுகின்ற நாடு
நடைவழியே குரங்கேறி மரமேறு நாடு
நாடுகருமை சேற்றில்மகிழ் காடுந்தமிழ் நாடே. (௩)

(தொடரும்) திரு. வி. க.

# "நவசக்தி" ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதிய நூல்கள்

## மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும்

இந்நூல் காந்தியடிகள் வரலாற்றைக் கூறுவதன்று. இஃது அவர் வரலாற்றிலுள்ள நுட்பங்கள் மனிதவாழ்க்கையோடியைந்து நிற்கும் முறையைக் குறிப்பது; அதாவது காந்தீயத்தை அறிவுறுத்துவது; பகவத்கீதை திருக்குறள் என்னும் இரண்டு நூல்களின் சாரமாக அமைந்துள்ளது.

இந்நூற்கண் விளங்கும் முதற்பொருள் மூன்று, (க) மனிதன் எவன்' என்பது (உ) ஒருவன் மனிதனாக எத்தகை வாழ்க்கை நடாத்தல் வேண்டுமென்பது (ங) மனித வாழ்க்கைக்கு இலக்கியர் மகாத்மாகாந்தி என்பது.

இந்நூற்கண் பெண்மக்கட்குரிய பொருள், ஆண்மக்கட்குரிய பொருள், அரசியலுக்குரிய பொருள், சத்தியாக்கிரகப் பொருள், சமயப் பொருள் முதலிய பல பொருள்கள் காணலாம். இல்லறம், தியாகம், அஹிம்சை, சுயராஜ்யம், சத்தியாக்கிரகம், சமயவாழ்வு முதலியன வாசிப்போர்க் கின்பூட்டுவன. சமயவாழ்வில் சமரச சன்மார்க்க நுட்பம் மிக விளக்கமாக ஓதப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு தலைப்பின் கீழும் அடிகளின் அரவுரைகளைத் திரட்டி அவைகளை முறைப்படுத்தியுள்ள ஒழுங்கும் பொருளும் வாசிப்போர்க்கு இன்பூட்டுவதோடு நேரிய வாழ்வு நடாத்துமாறு அவரை அவைகள் தூண்டும். சன்மார்க்கத் துறைகள் பல இந்நூற்கண் பொலிதல் காணலாம். மூன்றாம் பதிப்பு. விலை ரூபா 2-8-0.

## பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை

இந்நூல், பெண்மை, தாய்மை, இறைமை என்னும் முப்பொருளை முதலாக உடையது. இம்மூன்றும் முறையே நூலின் உடல் உள்ளம் உயிராக அமைந்திருக்கின்றன. இம்மூன்று முதலினின்றும் கிளம்பிய கவடுகளும் கோடுகளும் நூலின் பிற உறுப்புக்களென்க.

வேத காலத்துப் பெண்மக்கள் நிலை, பழந்தமிழ் நாட்டுப் பெண்மக்கள் நிலை, அவர்கள் உரிமை, இடைக்காலத்தில் பெண்மக்கட்கு நேர்ந்த சிறுமை, அச்சிறுமை போக்குதற்குரிய வழிகள் முதலியன இந்நூலில் ஆராய்ச்சி முறையில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. பூதபௌதிக நூல்களை யொட்டிப் பெண்ணின் பெருமை நிறுவிக் காட்டப்பட்டிருக்கிறது.

இயற்கை வாழ்வு, செயற்கைத் தாழ்வு, உடலோம்பல் முதலிய நறும்பொருள்கள் நூலின் ஊடே ஊடே பெய்யப்பட்டிருக்கின்றன. கூடாவொழுக்கம், இளமைமணம், பதியிலாமை முதலியவற்றான் விளையுங் கேடுகள் நூற்கண் உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. விலை ரூபா 2.

## தமிழ்த் தென்றல்

தமிழ் மொழியில் வீரச்சுவையுண்டு என்பதை இந்நூலிற் காணலாம். இயற்கை வருணனைகள் இயற்கைப்படம்போலக் காட்சியளிக்கும். மேடைகளில் நயம்படத் தமிழில் பேச முயல்வோர்க்கும், தமிழ்க் கட்டுரைகள் வரைவோர்க்கும் இந்நூல் பெருந்துணை செய்யும். ஒவ்வொரு தமிழ் மாணாக்கர் கையிலும் இந்நூலிருத்தல் வேண்டும். இந்நூலைப் படிப்போர்க்குத் தேசபக்தியும், உரிமையில் வேட்கையும் வீறிட்டெழும் என்பது உறுதி.

தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமை, தாய்மொழிப்பற்று, பிறப்புரிமை, உரிமை வேட்கை, தேசபக்தி, சுயராஜ்யப் பேறு, ஒற்றுமை, சகோதர நேயம், ஊக்கம், காந்தியடிகள் அறம், ஒத்துழையா இயக்கச் சிறப்பு, அவ்வியக்க முறைகளால் நாட்டுக்குள்ள நலன் முதலிய பொருள்கள் இந்நூற்கண் ஆங்காங்கே மிளிர்கின்றன. பெயருக்கேற்ற பொருளை இந்நூலிற் பெறலாம். விலை ரூபா 2.

## சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து

இந்நூற்கண் இளமை மாண்பு, அழகின் பெற்றி, இளமையழகோம்பு முறைகள், காவியச் சிறப்பு, ஓவியத்திறன், இசை நுட்பம், நாடக நலன், சமரச சன்மார்க்கமென்னும் அன்பு நெறியே சமயமென்பது, கோயில் சீர்திருத்தம் முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. நாடு மொழி பிறப்பு முதலியவற்றான் வேற்றுமை பாராட்டுவதால், சகோதர நேயத்துக்கு ஊறு நிகழ்தல் தெள்ளத் தெளிய விளக்கப்பட்டிருக்கிறது; சாதி வேற்றுமை, தீண்டாமை, பெண்ணடிமை முதலிய சிறுமைகளின் நீக்கம் நாட்டுக்கு விடுதலை நல்குவது என்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது; கண்மூடி வழக்க வொழுக்கங்கள் மிக உரமாக மறுக்கப்பட்டிருக்கின்றன; வாழ்விற்குரிய வேறு பல சீர்திருத்தங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலின் உள்ளுறை இளைஞருலகிற்கு நல்விருந்தளிக்கு மென்பதில் ஐயமில்லை. விலை அணா 8.

## முருகன் அல்லது அழகு

இஃது இயற்கை அழகை எடுத்துக்கூறும் நூல். இயற்கை அன்னையின் மாண்பை இந்நூற்கண் காணலாம். இந்நூற்கண் முருகன் சொற்பொருள் விளக்கம், அழகினியல், இளமைப்பேறு, இயற்கை மாண்பு, நோன்பு, வழிபாடுகளின் திறம், முருகனடியார் இயல்பு முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலை முற்றும் பயில்வோர் உள்ளத்தில், இயற்கை வழிபாட்டில் ஆர்வம், ஒரே கடவுள் ஒரே நெறி என்னும் உறுதி, எவ்வுயிர்க்குந் தீங்கு நினையாப்பேறும் முதலியன நிலவும். இயற்கை வருணனையும் உரை நடையும் நெஞ்சைக் கவரும். விலை ரூபா 1.

## என் கடன் பணிசெய்து கிடப்பதே

இந்நூலில் பணியின் பெருமை விரிவாக ஓதப்பட்டிருக்கிறது. கடவுள்பணி, சராசரப் பணி, சிறப்பாகத் தேசப்பணி ஆகிய இப்பணிகளை இந்நூலில் காணலாம். இஃதொரு கருமயோக நூல்; காலத்துக்கேற்றது. இரண்டாம் பதிப்பு. விலை அணா 8.

## சைவத்தின் சமரசம்

இந்நூற்கண் சமயத்தின் இயல்பு இஃது என்பதும், எல்லாச்சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வழியில் போற்றுகின்றன என்பதும், சமயங்கள் பலவாய்க் கிடப்பினும் அவைகள் யாவும் சமரசத்தையே குறிக்கொண்டு நிற்கின்றன என்பதும், அச் சமரசமே சைவமென்பதும், பிறப்பையொட்டி உயர்வு தாழ்வு பாராட்டாமை, கைம்மாறற்ற பணி, பிறர் குற்றம்பொறுத்தல், பாவ மன்னிப்பு முதலியன சைவசமயத்தில் சிறப்பாகவிருக்கின்றன என்பதும், அருள்-கருணை-இரக்கம்-தயை உள்ள விடங்களிலெல்லாம் சைவம்மிளிரும் என்பதும், சைவம் ஒரு சமயம் அன்றென்பதும் பிறவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. விலை அணா 8.

## சைவத்திறவு

"தென்னாடுடைய சிவனே போற்றி—எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்னும் உரையைப் பீடிகையாகக் கொண்டு எழுதப்பட்டது.

இந்நூலிடை, மாணிக்கவாசகனார் நிலை, திருவண்டப்பகுதி நுட்பம், நினைப்பற நினைத்தலின் விளக்கம், மூவித உடலங்களின் பாகுபாடு, ஒரே கடவுளுண்மை, 'தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறை'' என்பது, இறைக்கும் இயற்கைக்குமுள்ள தொடர்பு, சேய்சிவம் என்பது, சமரசம், இறைவனை யுணரும் வழி, இறைவனது சொரூப தடத்த இயல்புகள், காவியங்களின் இன்றியமையாமை, நம்பிக்கையின் அவசியம், ஆராய்ச்சியின் அளவு, சைவத்திறவுள்ள இடம், கடவுளின் அகண்டாகாரப் படம், "தோடுடைய செவியன்'' என்பதின் உள்ளுறை, ஆண்டவன் பெண் ஆண் வடிவமாகவிருக்கும் நுட்பம், தோடு விடை மதி சுடலை முதலியவற்றின் உட்பொருள், கோயில்களின் நோக்கம், தற்காலக் கோயில்கள், சாதிப்பேய், நூல்களுங் கோயில்களே என்பது, தவப்பேறு முதலிய பொருள்கள் சுருங்கிய முறையில் ஆங்காங்கே விளக்கப்பட்டிருக்கின்றன. உருவ வழிபாட்டின் நுட்பமும், இன்றியமையாமையும் விளக்கமாக இந்நூற்கண் ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலைப் படிப்போர்க்கு உருவ வழிபாட்டைப் பற்றிய பலதிற ஐயப்பாடுகள் நீங்கும். விலை அணா 8.

## இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்

இஃதொரு சமரச சன்மார்க்க நூல். இந்நூலில் ஷடாந்த இயல், சமரச நுட்பம், சன்மார்க்க விளக்கம் முதலியன மிக விரிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

இராமலிங்க சுவாமிகள் ஷடாந்த சமரச சன்மார்க்கத்தில் நின்று, அருணெறியோம்பி, உயிர்கள் வழிபாடே கடவுள் வழிபாடு என்பதை யுணர்ந்து, சமயவாழ்வு நடாத்திய விதம், அவர் ஆண்டவனை நோக்கிச் செய்த முறையீடு, அழுத அழுகை, அவர் கொண்ட குரு, பொருணூல், வழிபடுகடவுள், அவரடைந்த மரணமிலாப் பெருவாழ்வு, அதற்குரிய முறை முதலியன தெளிவாக இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் காலத்துக்கேற்ற ஒன்று என்பது நூலை முற்றும் வாசிப்போர்க்கு இனிது விளங்கும். இக்காலதேச வர்த்தமானம் வேண்டுஞ் செம்மைச் சீர்திருத்தங்கள் பல இந்நூற்கண் மிளிர்கின்றன. விலை ரூபா 1.

## கடவுள் காட்சியும் தாயுமானாரும்

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானார் அருளிச் செய்த "ஐவகை எனும் பூதம்'' என்னும் திருப்பாட்டைப் பீடிகையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலாமென்பது. கடவுளின் அருட்டன்மையும், படைப்பு முறைகளும், படிகளும், படைப்பின் நோக்கமும், உயிர்களின் கடமையும் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கப்பட்டிருக்கின்றன. விலை அணா 4.

## தமிழ் நூல்களில் பௌத்தம்

வேண்டுவோர் 5 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். விலை அணா 4.

நாயன்மார் விலை அணா 3. சைவசமய சாரம் விலை அணா 1.

தமிழ்நாடும் நம்மாழ்வாரும் விலை அணா 4.

இமயமலை அல்லது தியானம் (அச்சில்)

**இந்நூல்கள் எல்லாவற்றையும் ஏககாலத்தில் வாங்குவோருக்குத் தபாற் செலவின்றி, மணியார்டர் கமிஷன் கழித்து வி. பி-யில் அனுப்பப்படும்.**

# வேறு பதிப்புகள்

## விநாயகர் பனுவல் திரட்டு

விநாயகக் கடவுள் சம்பந்தமாக ஆன்றோர் அருளிச் செய்துள்ள அரிய பாக்கள், பல நூல்களினின்றும் திரட்டப்பட்டன. பூஜா காலங்களில் ஓதுதற்குரிய சிறந்த நூல். விலை அணா 6.

## முருகவேள் பனுவல் திரட்டு

### சுப்பிரமணிய பக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தர்சஷ்டி கவசம், திருமுருகாற்றுப்படை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதிமுறை, திருத்தணிகை சந்நிதிமுறை, கந்தபுராணம், தணிகைப் புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கியிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. இப்பதிப்பில் முன்னினும் பாக்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விலை ரூ. 1.

## முருகன் திருவருட்பா

ஸ்ரீமத் - இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்தது; திருவருட்பா ஐந்தாந் திருமுறையிலிருப்பது; ஓதுவோர் மனதை அழலிடைப்பட்ட மெழுகென உருகச் செய்வது. விலை அணா 8.

## தேவி தோத்திர மஞ்சரி

தாயுமான சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், குமாரகுருபர சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், சிவஞான சுவாமிகள், அபிராமிபட்டர் முதலிய ஆன்றோர்கள் அருளிச் செய்த பாடல்களும், சௌந்தரியலகரி, ஆனந்தலகரி, சக்திகவசம் முதலிய பல நூல்களினின்றும் திரட்டி எடுக்கப்பட்ட தேவி தோத்திரங்களும் அடங்கிய அரிய நூல். விலை அணா 4. 5 அணா தபால் முத்திரை அனுப்புவோர்கட்கு ஒரு புத்தகம் அனுப்பப்படும்.

## திருப்போரூர்ச் சந்நிதிமுறைத்திரட்டும், அரும்பதவுரையும்

இதில் அரிய பாக்கள் திரட்டி எடுக்கப்பட்டுள்ளன. அரும் பதங்களுக்கு உரை வரையப்பட்டிருக்கிறது. வேண்டுவோர் விலைக்கு மேல் ஒரு அணா தபால் தலை சேர்த்து அனுப்பினால் புத்தகம் அனுப்பப்படும். விலை: கிளேஸ் அணா 5; ரப் அணா 3.

## கந்தபுராணச் சுருக்கம்

### மூலமும், பொழிப்புரையும் விருத்தியும்

இந்நூல் ஸ்ரீமத் - சம்பந்தசரணாலய சுவாமிகளால் சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை முதலியன ததும்ப 1000 பாடல்களாகப் பாடப்பட்டது; பரந்து கிடக்கும் பெரிய கந்தபுராணக் கதையை இனிது விளக்குவது. மூலத்திற்கேற்ற பொழிப்புரையும், விருத்தியும் பலநூற் பிரமாணங்களுடனே எழுதப்பட்டுள்ளன. விலை ரூபா 3.

**முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.**

வந்தேமாதரம்

# நவசக்தி

“என்கடன் பணிசெய்து கிடப்பதே”

சிலம்பு கக பிரசோற்பத்தி௵ ஆடிமீ௳ எ௨ (22—7—31) புதன்கிழமை பரல் ௯௫

## புராதன இந்தியாவில் கப்பற்றொழில்

“சரித்திரக்காரன்”

இந்தியா தன்னைப் பாதுகாத்துக் கொள்ளப் போதிய கப்பற் படையை வைத்துக் கொண்டிருக்கவில்லை யென்றும், இந்தியர்கள், கப்பற்றொழிலில் பயிற்சி பெறவேண்டுமென்ற ஆர்வத்தைப் பெற்றிருக்கவில்லை யென்றும், இதனால் இந்தியா சுயராஜ்ய இன்பத்தை நுகரத் தகுதியுடையதாயில்லை யென்றும் சிலர் கூறுவர். இவர் கூற்று பொய்யென்று மறுத்தல் எளிது. இந்தியாவில் புராதன காலந்தொட்டு, கப்பற் றொழில் திறம்பட நடைபெற்று வந்திருக்கிறதென்பதற்கும், இந்தியர்கள், வெளிநாடுகள் பலவற்றிற்கும் சென்று வாணிபம்செய்து வந்தார்களென்பதற்கும் பல சான்றுகள் கிடைக்கின்றன.

வேதகாலத்திலிருந்தே, இந்தியர்கள் திரை கடலோடி திரவியந்தேடி வந்தார்கள். இங்ஙனம் செல்வதற்குப் பல வகையான கப்பல்கள் இருந்தன. கப்பல்களை நிர்மாணம் செய்யும் தொழிலாளர்கள் தனிப்பட்டவராய் இருந்தனர். மௌரியர்கள் காலத்தில் இவர்கள் அரசாங்க ஊழியர்களாயிருந்து சம்பளம்பெற்று வந்தது குறிப்பிடத்தக்கது. கப்பல்கள் கட்டுவதற்கு இன்னின்ன விதமான மரங்களே உபயோகிக்கப்பட வேண்டுமென்றும், இதனால் இன்னின்னநன்மைகள் ஏற்படுமென்றும் விதிகள் ஏற்பட்டிருந்தன. கப்பல்களைக் கட்டுகையில் மரப்பலகைகளை ஒன்றாகக் கூட்டி அமைக்கும்போது அவைகளின் அடிப்பாகத்தை—அதாவது தண்ணீர் படும்பாகத்தை— இரும்புச் சாமான்களால் பிணைக்கக்கூடாதென்றும், இதைத் தவிர வேறெவ்வித சாதனத்தையாவது உபயோகித்து, மேற்படி பலகைகளைப் பிணைக்கலாமென்றும் ஓர் ஆசிரியர் எச்சரிக்கை செய்கிறார். கடல்களின் நடுவே, ஆங்காங்கு, காந்த சக்தியுள்ள கற்பாறைகள் இருக்கின்றனவென்றும், இவை, இரும்புத் துண்டங்களினால் பிணைக்கப்பட்ட கப்பல்களை அடியில் இழுத்துக்கொள்ளும் என்றும் இவர் சமாதானம் கூறியிருப்பது பெரிதும் பாராட்டத்தக்கதா யிருக்கிறது.

### கப்பல்களின் வகைகள்

‘யுக்தி கல்பதரு’ என்ற ஒரு வடமொழி நூலின்படி கப்பல்கள் ‘சாமானியக் கப்பல்கள்’ என்றும், ‘விசேஷக் கப்பல்கள்’ என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அதாவது, நதிகளிலும் ஆழமில்லாத நீர் நிலைகளிலும் செல்லக்கூடியன சாமான்ய மென்றும், கடல்களில் செல்லக்கூடியன விசேஷ மென்றும் வகுக்கப்பட்டிருந்தன. முற்சொன்ன சாமான்யக் கப்பல்கள், அவைகளின் நீளம், அகலம், உயரம் இவைகளுக்குத் தகுந்தாற்போல் பத்துவகையாகவும், அப்படியே விசேஷக் கப்பல்களும் பத்து வகையாகவும் பிரிக்கப்பட்டிருந்தன.

### சாமான்யக் கப்பல்கள்

| பெயர் | முழநீளம் | முழஅகலம் | முழ உயரம் |
|---|---|---|---|
| 1. க்ஷுத்ரா | 16 | 4 | 4 |
| 2. மத்யமா | 24 | 12 | 8 |
| 3. பீமா | 40 | 20 | 20 |
| 4. சபலா | 48 | 24 | 24 |
| 5. படலா | 64 | 32 | 32 |
| 6. பயா | 72 | 36 | 36 |
| 7. தீர்க்கா | 88 | 44 | 44 |
| 8. பத்ரபுடா | 96 | 48 | 48 |
| 9. கர்ப்பரா | 112 | 56 | 56 |
| 10. மந்தரா | 120 | 60 | 60 |

### விசேஷக் கப்பல்கள்

இந்த விசேஷக்கப்பல்களில், தீர்க்கக் கப்பல்கள் என்றும் உன்னதக் கப்பல்களென்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டு, முன்னதில் பத்துவிதமென்றும், பின்னதில் ஐந்து விதம் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

தீர்க்கக்கப்பல்கள் :

| பெயர் | முழநீளம் | முழஅகலம் | முழ உயரம் |
|---|---|---|---|
| 1. தீர்க்கிகம் | 32 | 4 | 3 1/5 |
| 2. தரணி | 48 | 6 | 4 4/5 |
| 3. லோலா | 64 | 8 | 6 2/5 |
| 4. ஒத்வரா | 80 | 10 | 8 |
| 5. காமினி | 96 | 12 | 9 2/5 |
| 6. தரி | 112 | 14 | 11 1/5 |
| 7. ஜங்காலா | 128 | 16 | 12 4/5 |
| 8. ப்லாவினீ | 144 | 18 | 14 2/5 |
| 9. தாரிணீ | 160 | 20 | 16 |
| 10. வேகினீ | 176 | 22 | 17 3/5 |

உன்னதக் கப்பல்கள் :—

| பெயர் | முழநீளம் | முழஅகலம் | முழ உயரம் |
|---|---|---|---|
| 1. ஊர்த்வா | 32 | 16 | 16 |
| 2. அனூர்த்வா | 48 | 24 | 24 |
| 3. ஸ்வர்ணமுகி | 64 | 32 | 32 |
| 4. கர்ப்பிணி | 80 | 40 | 40 |
| 5. மந்தரா | 96 | 48 | 48 |

மேற்கூறிய கப்பல்களில், எதெதில் பிரயாணஞ் செய்தால் என்னென்ன பயன்கள் விளையும் என்ற விவரங்களும் கூறப்பட்டிருந்தன.

கப்பல்களில் பிரயாணம் செய்வோர் சௌகரியமாகச் செல்வதற்கு என்னென்ன ஏற்பாடுகள் செய்யப்படவேண்டுமென்பதைப் பற்றியும் கப்பல்களை எப்படி அலங்கரித்து வைத்துக் கொண்டிருப்பதென்பதைப்பற்றியும்பல விதிகள்ஏற்பட்டிருந்தன. இவ்விதிகளின்படி ஒழுங்காகநடந்துவந்ததனால், பிரயாணஞ் செய்தவர், கப்பல் செலுத்துவோர் முதலியோர் எவ்விதஆபத்திற்கும்அதிகமாக உட்படவில்லை யென்று நன்கு புலனாகின்றன. கப்பல்களை அழகு படுத்துவதற்கு, தங்கம், வெள்ளி, செம்பு, இவை மூன்றும் கலந்தது ஆகிய இந்த நான்கு உலோகங்களையே உபயோகிக்க வேண்டும். தவிர, நான்கு பாய்மரங்களை உடைய கப்பல்களுக்கு வெண்மை நிறமும், மூன்று பாய்மரங்களுடையனவற்றுக்குச் சிவப்பு நிறமும், இரண்டு பாய்மரங்களுடையனவற்றிற்கு மஞ்சள் நிறமும், ஒரு பாய் மரமுடையனவற்றிற்கு நீலநிறமும் உபயோகப்படுத்தப்படவேண்டும். கப்பல்களின் முகத்தில், அதாவது தலைப்பக்கத்தில் சிங்கம், எருமை, பாம்பு, யானை, புலி, பட்சிகள் முதலிய உருவங்களை மரத்தால் செய்து அழகுக்குவைக்கலாம்.

கப்பல்களில் இருக்கும் ‘‘காபின்’’ என்று இக்காலத்தில் கூறப்படுவனவற்றிற்கு அக்காலத்தில் ‘மந்திரம்’ என்று வழங்கப்பட்டு வந்தது. இந்த ‘மந்திரம்’ இருக்கும் இடத்திற்கும் அளவுக்கும் தக்கபடி கப்பல்கள் ஆங்காங்குச் செல்வதற்கு உபயோகிக்கப்பட்டு வந்தன. கப்பலின் ஒருமுனையிலிருந்து மற்றொரு முனைக்குச் செல்லக்கூடிய அளவு விசாலமாயிருக்கக்கூடிய ‘காபின்’களையுடைய கப்பல்களுக்குச் ‘ சர்ப்பமந்திரக்கப்பல்கள்’ என்று பெயர். அரசர்களுடைய பொக்கிஷம், குதிரைகள், ஸ்திரீகள் முதலியன செல்வதற்கு இவை உபயோகிக்கப்பட்டு வந்தன. கப்பலின் மத்திய பாகத்தில் ‘காபினை’யுடைய கப்பல்களுக்கு ‘மத்திய மந்திரக் கப்பல்கள்’ என்று பெயர். மழை காலத்திலும், அரசர்கள் சந்தோஷார்த்தமாகச் செல்வதற்கும் இவை உபயோகிக்கப்பட்டுவந்தன. கப்பலின் தலைப் பக்கத்தில், அதாவது முகப்பில் ‘ காபினை’யுடைய கப்பல்கள் ‘ அக்ரமந்திரக் கப்பல்கள்’ என்று அழைக்கப்பட்டன. இவை, பெரும்பாலும் கோடைகாலத்தில் தூரதேசப் பிரயாணங்களுக்கு உபயோகப்படுத்தப் பட்டன. தவிர, கடல்களில் யுத்தம் நடைபெறும்போதும், இவ்வகைக் கப்பல்களே உபயோகிக்கப்பட்டு வந்தன.

### மௌரியர் காலம்

இங்ஙனமே புத்தர் காலத்திலும், பின்னர், மௌரிய வம்சத்தினர் முதலியோர் அரசாண்ட காலத்திலும் இந்தியாவில் கப்பல் தொழில் மிக ஒழுங்காக நடைபெற்றது. சந்திரகுப்த மௌரியன் காலத்தில் கப்பற்றொழிலையும், கப்பல் வாணிபத்தையும் கவனிப்பதற்கென்றே தனியான ஓர் இலாகா இருந்தது. இந்த இலாகாவின் தலைவனுக்கு ‘நாவாத்யட்சன்’ என்று பெயர். சமுத்திரம், ஆறு, பெரிய நீர்நிலை ஆகிய இவைகளில் செல்லும் எல்லாக் கப்பல்களின் போக்கு வரவு விஷயங்களைப் பற்றியும் இவன் கவனித்து வந்தான். இந்த அதிகாரிக்குப் பல திறப்பட்ட கடமைகள் இருந்தன. தற்காலத்திலுள்ள ‘‘போர்ட் கமிஷனர்’’ (துறைமுக அதிகாரி) என்ற அதிகாரிக்குச் சமமாக இவனைச் சொல்லலாமாயினும், இவனுக்கு மௌரியர் காலத்து ‘‘நாவத்யட்ச’னுக்கு—அதிக கடமைகள் இருந்தனவென்று சொல்லவேண்டும். இவன் கப்பல் போக்கு வரவு, வியாபாரம் இவை சம்பந்தமாகப் பலவித வரிகளை வசூலிக்க வேண்டியவனா யிருந்தான். உதாரணமாக, கடற்கரையிலும், நதிக் கரையிலும், ஏரிக் கரையிலும் உள்ள கிராமங்கள், நிரந்தரமான ஒரு வரியை ஆண்டு தோறும் செலுத்திக்கொண்டு வந்தன. வலைஞர்கள், மீன் பிடிப்பதற்குரிய கட்டணமாக, தங்களுடைய மீன் வரும்படியில் ஆறில் ஒரு பாகத்தை இந்த அதிகாரிக்குச் செலுத்தி வந்தார்கள். வியாபாரிகள் துறைமுகச் சுங்கம் செலுத்தி வந்தார்கள். அரசாங்கத்தினுடைய, அல்லது அரசனுடைய கப்பல்களில் பிரயாணஞ் செய்ய விரும்புவோர், அதற்குரிய ஒரு கட்டணத்தைச் செலுத்தியே சென்றார்கள். சமுத்திரத்தில் முத்து, சங்கு முதலியன எடுக்க விரும்புவோர், குறிப்பிட்ட ஒரு கட்டணத்தைச் செலுத்தி, அரசாங்கத்தாருடைய படகுகளை உபயோகித்துக் கொள்ளலாம். இவை தவிர, சாமான்கள், மிருகங்கள் முதலியன ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு போகப்பட்டன வென்றும் இதற்காகத் தனித் தனிக் கட்டணங்கள் விதிக்கப்பட்டு வந்தனவென்றும் தெரிகின்றன. இதனால், அக்காலத்தில்—அதாவது இற்றைக்குச் சுமார் இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குமுன்னர்—இந்தியாவின் கப்பல் வியாபாரம் எவ்வளவு செழுமையாக நடைபெற்று வந்

தென்பது நன்கு புலனாகும். சிறிதளவு சாமானுடனும், ஒரு நாற்கால் பிரயாணியுடனும் கப்பலில் செல்லும் ஒரு மனிதன் ஒரு மாஷம் (ஒரு வித நாணயம்) கட்டணமாகச் செலுத்தவேண்டும். தலையில் அல்லது தோளில் எடுத்துச் செல்லக்கூடிய ஒரு மூட்டை பளுவுக்கும், பசு, குதிரை ஆகிய இவற்றிற்கும் தனித்தனியாக இரண்டு மாஷமும், ஒட்டகை, எருமை முதலியவற்றிற்கு நான்கு மாஷமும், ஒரு சின்ன வண்டிக்கு ஐந்து மாஷமும், மாடுகள் இழுத்துச் செல்லக்கூடிய வண்டுக்கு ஆறு மாஷமும், பெரிய வண்டிக்கு ஏழுமாஷமும் கட்டணமாகச் செலுத்தப்படவேண்டும். வியாபாரத்திற்குரிய எந்தப் பொருளுக்கும், அதுவிற்பனைக்காயிருந்தாலும் இல்லாவிட்டாலும், ஒரு மூட்டைக்கு நான்கு மாஷம் வீதம் கட்டணம் செலுத்தப்படவேண்டும்.

போதுஜன சௌகரியம்

மேலே கூறப்பட்ட வரிகளை வசூலிப்பதோடு "நாவாத்யட்சன்" போதுஜனங்களின்சௌகரியத்திற்காகத்துறை முகங்களில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் விதிகள் சரியாக அநுஷ்டிக்கப்படுகின்றனவா என்பதையும் கவனித்துக் கொண்டு வந்தான்.

கப்பல்களும் சிறு படகுகளும், வருஷத்தில் குறித்த சில காலங்களிலேயே நதிகளைக் கடக்கலாமென்று விதி இருந்தது. மழைபெய்ந்து வெள்ளம் பெருகியோடும் காலத்தில் ஆற்றைக் கடப்பது அபாயகரமானதால் இந்த விதி ஏற்படுத்தப்பட்டிருந்தது. எப்பொழுதும் ஒரே மாதிரியாக நீர் ஓடும் பெரிய ஆறுகளில், திறமையான மாலுமிகள் தலைமையில், ஒழுங்கான—எவ்விதத்திலும் பழுதுபடாத—கப்பல்களே செல்லுமாறு "நவாத்யட்சன்" பார்த்துக் கொள்ளவேண்டும். அதிகாரியின் முன்னுத்திரவின்றி, எவரும் கப்பல்களில்ஏறி ஆற்றைக் கடந்து செல்லக்கூடாது. மற்றும் கப்பல்கள் ஆற்றைக் கடப்பதற்குரிய இடமும் நேரமும் குறிக்கப்பட்டிருந்தன. இதனை மீறிநடந்தவர் தண்டிக்கப்பட்டனர். முன்னுத்தரவு பெறாமல், ஆனால் குறித்த நேரத்தில் செல்லும் ஒரு கப்பலில்ஏறிச் செல்வோன், முன்னுத்திரவு பெறாத குற்றத்திற்காக 26¾ பணம் அபராதமாக விதிக்கப்பட்டான். ஆனால், வியாபார அபிவிருத்தி, பொதுஜன நன்மை இவைகளை உத்தேசித்து, மேற்கண்ட விதிகளுக்கு, சில விலக்குகளும் இருந்தன. உதாரணமாக, வலைஞர்கள், கட்டை, புல், புஷ்பம், பழம், கறிகாய் இவைகளை எடுத்துக்கொண்டு வருவோர்—செல்வோர், சந்தேகிக்கப்பட்ட குற்றவாளிகளைத் தொடர்ந்து செல்லும் உத்தியோகஸ்தர்கள், சேனைகளுக்கு வேண்டிய பொருள்களை எடுத்துச்செல்வோர் ஆகிய இத்தகையோர் எந்நேரத்திலும், இலவசமாகக் கப்பலேறி ஆற்றைக் கடந்து செல்லலாம். இவர் தவிர பிராமணர்கள், துறவிகள், குழந்தைகள், நோயாளிகள், இராஜதூதர்கள், கர்ப்பஸ்திரிகள் ஆகியோர் இலவசப் பிரயாணச்சீட்டு பெற உரியவராயிருந்தனர். இந்நாட்டிற்கு அடிக்கடி வந்து கொண்டிருந்த அந்நிய நாட்டு வியாபாரிகளும், உள்ளூர் வியாபாரிகளுக்கு நன்றாகத் தெரிந்திருந்த வியாபாரிகளும் இலவசமாகத் துறை முகத்தில் வந்திறங்க அநுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

"நவாத்யட்சன்" கடமைகள்

புயற் காற்றாலோ அல்லது வேறு காரணத்தாலோ பழுதுபட்டுத் துறை முகத்திற்கு வந்து சேரும் கப்பல்களைத் தகப்பன் போல் 'நாவாத்யட்சன்' கவனிக்க வேண்டுமென்று விதி இருந்தது. இடைவழியில் ஜலத்தினால் பழுது பட்டுப் போன சாமான்களைச் சுங்கவரியினின்று விலக்கவும்இவனுக்கு அதிகார மிருந்தது. மாலுமிகளில் வேண்டிய பேர் இல்லாமையினாலேயோ, அல்லது கப்பல் சரியாகப் பழுது பார்க்கப்படாமையினாலேயோ, அக்கப்பல்களில் ஏற்றிக் கொண்டு வரப்படும் சாமான்கள் பாழடைந்து போய்விட்டால், அதற்கு மேற்படி 'நாவாத்யட்சன்' நஷ்ட ஈடு கட்டிக் கொடுக்கவேண்டும். ஏனென்றால், இந்தக் கப்பல்கள் அரசாங்கத்தினுடையவையேயாதலால், இவைகளினால் ஏற்பட்ட நஷ்டத்திற்கு அரசாங்கத்தாரே ஈடு செய்யவேண்டுமென்ற ஏற்பாடு எவ்வளவு அழகாய் இருந்ததென்பதை நேயர்கள் நினைத்துப் பார்க்க வேண்டும்.

கொள்ளைக்காரர் கப்பல்களையும், சத்துரு தேசங்களுக்குச் செல்லும் கப்பல்களையும் அழித்துவிட "நாவாத்யட்சனு"க்கு அதிகாரம் இருந்தது. தவிர பிறருடைய மனைவியை அல்லது மகளை அபகரித்துச் சென்றவர், பிறருடைய சொத்தை எடுத்துச் சென்றவர், சந்தேகிக்கப்பட்ட நபர்கள், எவ்வித மூட்டையும் இல்லாதவர், தம்மிடத்திலுள்ள சாமானை மறைக்கப் பார்ப்போர், சமீபத்தில் துறவியானோர், வியாதியால் பீடிக்கப்படுவதாகப் பாசாங்கு செய்வோர், பயமடைந்தவர்போல் காணப்படுவோர், ஆயுதங்களையோ வெடிமருந்துகளையோ விஷப் பொருள்களையோ எடுத்துச் செல்வோர், நீண்ட தூரத்திலிருந்து பிரயாணச் சீட்டின்றி வந்தோர் ஆகிய இத்தகையோரை "நாவாத்யட்சன்" கைது செய்யலாம்.

மேலேகூறியவாற்றான், சுமார் இரண்டாயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன்னிருந்தேகப்பற்றொழிலும், கப்பல் வியாபாரமும் இந்தியாவில் மிகச் செழுமையாக நடந்துவந்தன வென்பது நன்கு புலப்படும். முக்கியமாக மௌரிய வம்சத்தினர் ஆண்டு கொண்டிருந்த காலத்தில், இந்தியாவுக்கும், வெளிநாடுகளுக்கும் நெருங்கிய வியாபார சம்பந்தம் இருந்தது. அந்நியநாட்டார் பலர் வியாபார விஷயமாக இந்தியாவுக்கு வந்து கொண்டும் போய்க்கொண்டுமிருந்தனர். இவர்களை, மரியாதையுடன் வரவேற்று, இவர்களுக்கு வேண்டிய இடம், உணவு, அவசியமானால் வைத்திய உதவி முதலிய வசதிகளைச் செய்து கொடுப்பதற்கென்றே தனியான சில உத்தியோகஸ்தர் நியமிக்கப்பட்டிருந்தனர். சந்திர குப்தனுடைய அரசாங்க வருமானத்தில், இறக்குமதித் தீர்வை ஒரு முக்கிய அம்சமாயிருந்தது என்ற ஒரு குறிப்பைக் கொண்டு, அக்காலத்தில் அந்நிய நாட்டுக் கப்பல் வியாபாரம் எவ்வளவு சிறப்பாக நடைபெற்று வந்ததென்பதை உணரலாம்.



## "மரணத்திற்கு அஞ்சாதே"

### "இறப்பும் பிறப்புமே உலகத்திற்குப் புதுமையை உண்டாக்குகின்றன"

தினேசரின் கடைசி நிருபங்கள்

தினேச சந்திர குப்தா என்னும் இளைஞர் 7-7-31 விடியற் காலை, வங்காளத்து அலிபூர் சிறையில் தூக்கிலிடப்பட்டார் என்பதுநேயர்களறிந்த விஷயம். இவர், தூக்கிலிடப்படுவதற்கு முன்னால், தமது தாய்க்கும் சகோதரிக்கும் எழுதிய கடிதங்களைச் சென்ற பாலில் வெளியிட்டோம். அவர், தமது உறவினரிற் சிலருக்கு இன்னும் சில கடிதங்கள் எழுதியிருக்கிறார். அவைகளைக் கீழே வெளியிடுகிறோம்:—

I

அலிபூர் மத்திய சிறை
கைதியின் கடிதம்
6—7—31
மாலை 5-30.

என் அன்புள்ள சகோதரி பிரதிவாவுக்கு,

உன்னிடத்தில் பல விஷயங்கள் சொல்லவேண்டு மென்றிருந்தேன். ஆனால் இனி அவைகளைச் சொல்ல முடியாது. இஃது என்னுடைய குற்றமல்ல; உன்னுடையதேயாகும். உன்னை எந்தத் தினத்தில் வரும்படி கூறி யிருந்தேனோ அந்த தினத்தில் நீ வரவில்லை. ஆதலின் உன்னைச் சந்திக்க எனக்கு வேறெவ்வித சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை.

நீ செல்லும் வழியில் பல இடையூறுகளையும் ஆபத்துகளையும் சந்திக்கவேண்டி வரும். ஆனால் இடைவழியில் நீ தயங்கி நிற்க மாட்டாய் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். நாம் ஒன்றாயிருந்த சொற்ப காலத்திற்குள் உன்னை நான் நன்றாக அறிந்துகொண்டு விட்டேன்.

இதுவே என் முதற்கடிதம்; கடைசி கடிதமும் இதுவே. அன்பைச் செலுத்தி நன்மையை விரும்பும்

தினேசதா.

II

5-30 மாலை
6—7—31

அம்மா!

தங்களை நான் இனிப்பார்க்க முடியாது. அடுத்தஉலகத்தில் உங்களுக்காக நான் காத்துக்கொண்டிருப்பேன்.

தங்களுக்காக நான் ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. அவ்விஷயத்தில் என்னுடைய சக்தியின்மைக்காக நான்எவ்வளவு வருத்தப்படுகிறேன் என்பதை ஒருவரும் அறிந்துகொள்ளமுடியாது. அதைப்பிறர் அறிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பமும் எனக்கில்லை.

என்குற்றங்களை மன்னித்துக்கொள்ளும் படி கேட்டுக்கொள்கிறேன்.

அன்போடு வணக்கஞ் செலுத்தும்

தங்கள் நாஷு.

III

6—7—31.
மாலை 5-மணி;

என் இனிய சகோதரா!

உனக்குக் கடிதங்கள் எழுதி வரும்படிக் கூறினாய். அப்படி எழுதுவதற்குரிய சந்தர்ப்பம் கிடைப்பதற்கு முன்னர் என் வாழ்நாள் அஸ்தமனமாகத் தொடங்கி விட்டது. கடைசி முறையாக விடைபெற்றுக்கொள்ளும் இச்சமயத்தில் நான் என்னகூற இருக்கிறது? சுயநலமற்றவனாயிருக்கும்படி உனக்கு ஆசீர்வாதஞ் செய்கிறேன். துன்பங்களையும் துயரங்களையும் கண்டு, உன் இதயத்திலிருந்து அன்பு என்னும் பால்பொங்க வேண்டுமென்பது என் விருப்பம். உன்னை விட்டுப் பிரிந்து போகிறேன் என்பதற்காக, சகோதரா! துக்கப்படாதே. இந்த இறப்பும் பிறப்புமே உலகத்திற்குப் புதுமையை உண்டாக்குகின்றன; உலக இதயமும் அடித்துக் கொண்டிருக்கிறது. வேறொன்றும் சொல்வதற்கில்லை.

அன்பையும் ஆசீர்வாதத்தையும் அளிக்கும் உன்னுடைய தினேசதா.

IV

6—7—31
மாலை 5-15.

பாவுதி!

உன் கடிதம் இப்பொழுதே கிடைத்தது. என் வாழ்க்கையின் சரித்திரத்தைக் கூறுவதற்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. ஆனால் நான் என்ன கூறவேண்டியிருக்கிறது? உங்களுடைய இதயங்களிலெல்லாம் என் வாழ்க்கைச் சரித்திரம் பொறிக்கப்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. சில வரிகளை இங்கியினால் எழுதிவிட்டால், அதனால் என் வாழ்க்கை பிரகாசித்துவிடப் போகிறதா? என் குற்றங்களை யெல்லாம் மன்னிக்கவும்.

அன்பையும் வணக்கத்தையும் செலுத்தும்

தங்கள்
தாகூர்போ;

### மரணத்திற்குப் பின்

குழந்தைகள் தாயுடன் பேசுகின்றன

லண்டன் க்வீன்ஸ் மண்டபத்தில் ரெவரெண்ட் ஆர்தர் போர்ட் என்னும் பாதிரியார், ஓர் உபந்நியாசம் செய்துகொண்டிருந்தபோது, சுமார் இரண்டாயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள். அப்பொழுது மேற்படி பாதிரியார், அங்கு வந்திருந்த சிலருடைய வரலாறுகளை எடுத்துக் கூறினார். இவருக்கு, ஆவி உலகத்திலிருப்பவர்களோடு பேசுஞ் சக்தியும் பார்க்கும் சக்தியும் இருக்கின்றன. இத்தச் சக்தியினால், இறந்துபோன பலருடைய முழுப் பெயர்களையும், அவர்கள் இருப்பிடம் முதலியவைகளையும் எடுத்துச் சொன்னார்.

"ஆர்தர் கோவன் என்ற இளைஞர், இராணுவத்தில் இஞ்சினீராக ஊழியஞ் செய்து கொண்டிருந்தவர், தன் தாயாரைத் தேடிக் கொண்டிருக்கிறார். அந்தம்மாள் நானூறு மைல் பிரயாணஞ் செய்து இங்கு இப்பொழுது வந்திருக்கிறாள். ஆர்தர்கோவனுடைய தாயாருக்கும் தகப்பனருக்கும் நான் ஒரு நற்செய்தியைக் கொண்டுவந்திருக்கிறேன்" என்று பாதிரியார் திடீரென்று கூறினார்.

உடனே, ஜனங்கள் மத்தியிலுட்கார்ந்து கொண்டிருந்த கோவனின் தாயார் எழுந்து, தழதழத்த குரலுடன் தன் மகன் ஐரோப்பிய யுத்தத்தில் ஊழியஞ் செய்து இறந்துபட்டானென்றும், தான் நியூகாஸில் என்ற ஊரிலிருந்து இந்த இடத்திற்கு வந்தது உண்மையென்றும் கூறினாள்.

பிறகு பாதிரியார், இரண்டு குழந்தைகளுடன் தாம் சம்பந்தம் வைத்துக்கொண்டிருப்பதாகவும், அவர்கள் இப்பொழுது இப்பூவலகத்தில் இருந்தால் 19 அல்லது 20 வயதுடையவர்களா யிருக்கவேண்டு மென்றும் கூறினார். உடனே, கூட்டத்திலிருந்த மேற்படி குழந்தைகளின் தாயார், தம்முடைய குழந்தைகளைப்பற்றித் தான் கூறுகிறாரென்று தெரிந்து அவர்களைப்பற்றிய விவரங்களைத் தெரிவித்தாள்.





## புதுக்கோட்டை கலகம்

### விசாரணைக் குழு நியமனம்

புதுக்கோட்டையில் சென்ற 15-7-31-ல் ஒரு பெரிய கலகம் நடைபெற்றது. புதுக்கோட்டை நகரத்தில் வீட்டு வரி உயர்த்தப்பட்டமையால், ஜனங்கள் அதைக்கண்டித்து வந்தனர். தங்களுடைய மனஉணர்ச்சியைக் காட்டுவதற்கறிகுறியாக 14-7-31-ல் வியாபாரிகள் கடைகளை மூடினார்கள். இதைப்பற்றி ஜனங்கள் அதிகாரிகளுக்குப் பன்முறை தெரிவித்தனரென்றும் இதனால் பயனேற்படவில்லை யென்றும், ஜனங்களுக்கு ஆத்திரமுண்டாயதற்கு இதுவே காரணமென்றுஞ் சொல்லப்படுகின்றன. 14-7-31 இரவே, சிலர் வீதிகளிலுள்ள மின்சார விளக்குகளை உடைத்தெறியத்தொடங்கினர்; கும்பல் கும்பலாக வீதிகள் தோறும் சுற்றிக் கொண்டு வந்தனர். 15-7-31 காலை, ஜனங்கள் ஒன்றுகூடி கோர்ட்டுக்கு முன்னரும், அரசாங்கக் கச்சேரிக்கு முன்னரும் நின்று கொண்டார்கள். அன்று அமாவாசையானதால், கோர்ட்டு, கச்சேரி முதலியவை காலையிலேயே வேலைசெய்யத் தொடங்கின. இவைகளுக்குச் செல்லும் உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள் முதலியோரை ஜனங்கள் வழி மறிக்கத் தொடங்கினார்கள். இப்படியிருக்கும்போது, ஜனங்கள் மெதுவாக பிரசிடெண்டு பங்களாவுக்குஅருகாமையிற்சென்று அங்குக் குழப்பம் செய்யத் தொடங்கினர். அச்சமயத்தில் சில போலீஸார், மேற்படி பங்களாவைக் காவல் புரிந்துகொண்டு வந்தனர். ஜனங்கள் ஆத்திரத்துடன் கும்பலாகக் கூடி நிற்பதைக் கண்ட பிரசிடெண்டு, திவான், போலீஸ் கமிஷனர் முதலியோர் முன்வந்து, அவர்களை அமைதியாயிருக்கும்படி கூறினர். இச்சமயத்தில் கூட்டத்திலிருந்து கல்விழத்தொடங்கியது. இதனால் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். இதன் பயனாக ஸ்ரீமான் பாலகிருஷ்ண பிள்ளை என்ற ஒருவர் உயிர் துறந்தார். இதைக்கண்டு ஜனங்களுக்கு அதிக கோபம் உண்டாகிவிட்டது; போலீஸாரையும் உத்தியோகஸ்தர்களையும் விரட்டியடிக்க ஆரம்பித்தனர். உத்தியோகஸ்தர்கள், கச்சேரிக்குள் சென்று புகுந்து கொள்ளவேண்டியதாயிற்று. பிறகு, ஜனங்கள், பிரசிடெண்டாகிய ஸ்ரீமான் டி. இராகவய்யாவின் பங்களாவைத் தாக்க ஆரம்பித்தார்கள். அங்கு ஜன்னல்களும் கதவுகளும் உடைத்தெறியப்பட்டன. உள்ளே யிருந்த மரச்சாமான்கள், துணிமணிகள்முதலியவைகளுக்குத் தீயிட்டனர். மோடார் வண்டி வீடும் இடமும் நெருப்புக் கிரையாக்கப்பட்டது. பிறகு ஜனங்கள், அரசாங்கக்கச்சேரிக்குள் புகுந்து, அபிஷியல் ரிசீவர் காரியாலயத்திற்குள் சென்று கதவை உடைத்து, பார் ரூம், முதலாவது இரண்டாவது கோர்ட்டுகள் முதலியவைகளிலுள்ள முக்கியமான தஸ்தாவேஜுகளுக்கும் மரச்சாமான்களுக்கும் தீயிட்டனர். பார் ரூமிலிருந்த சுமார் பதினாயிரம் ரூபா பெறுமானமுள்ளபுத்தகங்கள் அக்கினிபகவானுக்கு அர்ப்பணமாயின. பின்னர் போலீஸ் சர்க்கின் இன்ஸ்பெக்டர், சப் இன்ஸ்பெக்டர் ஆகிய இவர்களுடைய வீடுகளிலும் ஜனங்கள் புகுந்து அங்குள்ளசாமான்களை நெருப்பிலிட்டனர் என்று சொல்லப்படுகிறது. பிறகு, ஜனங்களில் ஒரு பாகத்தார், போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அதனைக் கைப்பற்றிக் கொண்டு, ரிகார்டுகள், போலீஸ் உடைகள் முதலியவைகளுக்குத் தீயிட்டனர். கூட்டத்தின் மற்றொரு பாகத்தார் அரசாங்க மத்திய சிறைச்சாலைக்குச் சென்று, நுழை வாயில்களை உடைத்தெறிந்து, எல்லாக் கைதிகளையும் விடுதலைசெய்து விட்டனர். ஜெயிலதிகாரி ஜனங்களால் துரத்தப்பட்டு உயிர் தப்ப ஓட வேண்டியிருந்ததென்று சொல்லப்படுகிறது.

ஊரிலேயிருந்த மாஜி திவான் ஸ்ரீமான் கணபதி சாஸ்திரியார் அரசாங்கக் காரியாலயத்திற்கு வந்து, கூட்டத்தாரை நோக்கிச் சில வார்த்தைகள் பேசி சாந்தப்படுத்தினார். புதிதாக விதிக்கப்பட்ட வரியை ரத்துசெய்துவிடுவதாகவும், துப்பாக்கிப் பிரயோகத்தினால் இறந்துபோனவரைப்பற்றி விசாரணை செய்வதாகவும், அவருடைய குடும்பத்தாருக்குத் தக்க நஷ்ட ஈடுசெய்து கொடுக்கப்படுமென்றும் இவர் அறிவித்தார். பிறகு சிறிது அமைதி ஏற்பட்டது. காலை ஒன்பதுமணிக்குத் தொடங்கிய கலகம்பகல் ஒரு மணிவரை நடைபெற்றதாகச் சொல்லப்படுகிறது.

16-7-31 இரவு, கவர்னர் ஜெனரலின் ஏஜெண்டான ஸ்ரீமான் ப்ரிச்சார்ட் வந்து சேர்ந்தார். பஞ்சாப் ரெஜிமெண்டைச் சேர்ந்த சுமார் 150 சிப்பாய்கள் வந்து ஆங்காங்கு காவல் புரியத் தொடங்கினர். ஐந்து பேருக்குமேல் எங்கும் கூட்டங்கள் கூடக் கூடாதென்று 144-வது பிரிவுப்படி உத்திரவு பிறப்பிக்கப் பட்டிருக்கிறது. இப்பொழுது நகரெங்கும் அமைதி ஏற்பட்டிருக்கிறது. கடைகளும் மற்றப் பொதுக்காரியாலயங்களும் திறக்கப்பட்டு வருகின்றன. புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள மற்ற வெளியூர்களிலும் கொள்ளைகள் நடைபெறுகின்றனவென்று செய்திகள் கிடைக்கின்றன. ஆண்டாக் கள்ளம் என்ற இடத்தில் 54 பேர் கைது செய்யப்பட்டனர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

சமீபத்தில் நடைபெற்ற கலகத்தில் போலீஸாரும், இராணுவப் படையினரும் ஜெயில் வார்டர்களும் எங்ஙனம் நடந்து கொண்டனர் என்பதைப்பற்றி விசாரிக்க ஸ்ரீமான் பரமசிவம்பிள்ளை, (தலைவர்) ஜி. கிருஷ்ணசாமி ஐயர், கே. என். இராதாகிருஷ்ண முதலியார் ஆகிய மூவர் அடங்கிய ஒரு கமிட்டியை சமஸ்தானத்தார் நியமித்திருக்கின்றனர். சிறையிலிருந்து தப்பியோடிப்போன கைதிகள் 15-8-31க்குள் திரும்பி வந்து சேர்ந்தால், அவர்கள் தண்டனையில் வஜாசெய்து கொடுக்கப்படுமென்று சமஸ்தான அறிக்கை யொன்று கூறுகிறது.

## தமிழ்நாடு காங்கிரஸ்

### காரியக்கூட்ட நடவடிக்கைகள்

15-7-31-ல் தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கூட்டம் திருச்சியில் ஸ்ரீமான் ச. இராஜகோபாலாச்சாரியார் தலைமையில் கூடியது. அதுகாலை கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

இராஜகிரி தேசபக்தரும் பொதுநல நோக்கமுள்ளவருமான ஜனாப்ஹாஜி ஆர்.எச். முகமத் ஹாஜி சாயப் மரணத்திற்கு இக்கூட்டத்தார் வருந்துவதுடன் அவருடைய குடும்பத்தாருக்குத் தங்கள் அநுதாபத்தைத் தெரிவிக்கின்றனர்.

இலங்கையிலுள்ள தென்னிந்தியத் தொழிலாளர்களின் நிலைமையைப்பற்றி விசாரணை செய்த ஸ்ரீமான் ஜேவியருக்கும், வடதஞ்சை காங்கிரஸ் கமிட்டியாருக்கும் இக்கூட்டத்தார் நன்றி செலுத்துகின்றனர்.

எவ்விதத் தடைகள் ஏற்பட்ட போதிலும் மதுவிலக்கு முயற்சி இன்னும் தீவிரமாக நடைபெறப் போவதாலும், அநேக குடும்பங்கள் இந்த வியாபாரத்தினால் நாசமாய்ப்போவதாலும், தங்களுக்குப் பொருள் நஷ்டம் ஏற்படாமல், அடுத்து நடக்கப்போகும் ஆப்காரி ஏலத்தில் ஏலக்காரர்கள் ஏலங்கேட்க வேண்டாமென்று இக்கூட்டத்தார் எச்சரிக்கை செய்கின்றனர்.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்தின் பலனையனுபவிக்கவேண்டி உப்புக் காய்ச்சும் கிராமவாசிகள் உப்பைக்கொண்டு போவதற்கு வண்டி எதவும் உபயோகிக்கக் கூடாதென்று கிராமவாசிகளுக்கு எச்சரிக்கை செய்யப்படுகிறது. அன்றியும் இந்த ஒப்பந்தத்திற்கு விரோதமாக எந்தக் காரியத்தையும் யாரும் செய்யக் கூடாது. ஏனெனில் பொது ஜனங்களுக்குக் கிடைத்திருக்கும் சொற்ப சாதகங்களும், ஒப்பந்தப்படி நடவாவிட்டால் நாம் இழக்க நேரும்.

சில கடைக்காரர்கள் தங்கள் விளம்பரங்களையும் விளம்பரப் பலகைகளையும் அகில இந்திய நூல் நூற்போர் சங்கக்கடைகளைப் போலவே அமைத்துக்கொண்டு, கதர் துணி வாங்க வருகிறவர்கள் ஷெ சங்கத்தின் கடையென்ற அக்கடைகளை எண்ணும்படி செய்வது வருந்தத்தக்கது. ஏனெனில் சங்கக்கடைகளிலிருந்து சிறிது சரக்கு வாங்கி வைத்துக் கொண்டு சுத்தக் கதரல்லாத துணிகளையும் வைத்துக்கொண்டு வியாபாரம் செய்கிறார்கள். இதுவரை காங்கிரசின் சுதேசிப்பிரசாரத்தினால் நலனடைந்தது போதுமென அவர்கள் திருப்தியடைவதுடன் இனியாவது தவறாகக் கூறி கதர் இயக்கத்திற்குக் கேடு விளைவிக்க வேண்டாமென்று அவர்களை இக்கூட்டத்தார் கேட்டுக் கொள்ளுகின்றனர்.

### "திராவிடன்" ஆசிரியர்

ஸ்ரீமதி அலர்மேலு மங்கைத் தாயாரம்மாள் எம். எல். சி. 20-7-31 தேதியிட்டு நமக்குப் பின் வருமாறு தெரிவிக்கிறார்:—

"திராவிடன்" ஆசிரியர் பதவியை நான் சென்ற ஜூன் மாதம் 5-ந் தேதி ஏற்றுக் கொண்டேன். பத்திரிகையின் முழுப் பொறுப்பும் என்னிடமே இருக்கும் என்ற ஏற்பாட்டின் பேரிலேயே இப்பதவியைநான் ஏற்றுக்கொண்டேன். ஆனால் சென்ற சில நாட்களாக ஒரு கூட்டு ஆசிரியரை நியமிக்க முயற்சிகள் நடைபெற்றன. இது விஷயமாகப் புதிய மானேஜராவது, புதிய சொந்தக்காரராவது என்னிடம் கலந்து பேசவேயில்லை. என்னுடைய முன் அநுமதியின்றியே, மேற்படி கூட்டு ஆசிரியர் பெயரும் பத்திரிகையில் வெளியிடப் பட்டுவிட்டது. புதிய நிருவாகத்தின் கீழ், தன் மதிப்புடன் நான் பத்திரிகைப் பொறுப்பை ஏற்று நடத்த முடியாதென்ற உணர்வதால் இன்று, ஆசிரியர் பதவியை ராஜினாமா செய்துவிட்டேன். நான் பத்திரிகையை நடத்தி வரும் காலத்தில் என்னிடம் அன்பு காட்டிய நண்பர் பலருக்கும் என் வந்தனத்தைச்செலுத்துகிறேன்.

## இந்தியா கோருவதென்ன?

### ஓர் ஐரோப்பியரின் உண்மை விளக்கம்

'மான் செஸ்டர் கார்டியன் நியூஸ்' என்ற பத்திரிகையில் ஸ்ரீமான் அலெக்ஸாண்டர் பாசைட் பின் வருமாறு எழுதுகிறார்:—

லங்காஷைர், இதுகாறும் இந்தியாவோடு நடத்திவந்த பெரிய வியாபாரம் இனியும் நடைபெறாது. இப்பொழுதாவது, பிரிட்டன் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டால், இனி, சுமாராக நல்ல வியாபாரம் நடக்கும்: இந்தியா இதுகாலை நியாயத்தையே வேண்டி நிற்கிறது.

சமீபத்தில் ஓர் அமெரிக்க நிருபர் மகாத்மா காந்தியுடன் பேசிக்கொண் டிருந்தபோது, "இந்தியா பூரண ஸ்வாஜ்யம் அடைந்தால், அமெரிக்காவிலிருந்து பல இயந்திரங்களைத் தருவித்து, இந்தியாவைக் கைத்தொழிற் தேசமாக மாற்றிவிடலாம்" என்று கூறினார். உடனே மகாத்மாகாந்தி "உண்மை; ஆனால், இந்தியர், பிரிட்டிஷ் இயந்திரச் சாமான்களை விரும்பலாம்" என்று கூறினார்.

இந்தியாவில் பிரிட்டிஷ் சாமான்கள் வருகின்றனவே யென்ற குறை இந்தியர்களுக்கு இல்லை. ஆனால் இந்தியாவில் ஆளும் பிரிட்டிஷ் அதிகாரவர்க்க முறையைப் பற்றியே குறை இருக்கிறது. அந்நியத்துணி பகிஷ்காரம் என்று காங்கிரஸ் கூறியிருப்பது, பிரிட்டிஷ் துணி பகிஷ்காரத்தை உத்தேசித்தே யாம். ஆனால் மான்செஸ்டர் மில்களைத் தாக்கவேண்டுமென்ற நோக்கத்தைவிட வேறு வித நோக்கமுமுண்டு. "எஃகுச் சட்டம்" என்று சொல்லப்படும் பிரிட்டிஷ் அதிகார வர்க்க ஆட்சியின்கீழ் இந்தியா உட்பட்டிருக்கிறதென்பதற்காக, பிரிட்டிஷ் துணி பகிஷ்காரத்தின்மீது நாட்டம் செலுத்தப்படுகிறது. இந்த "எஃகுச் சட்ட"த்தைஉடைத்தெறிய வேண்டுமென்பதே காங்கிரசின் நோக்கம். இதனால், பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு அடியோடு போய்விட வேண்டுமென்பதல்ல. ஆனால் இந்தியாவுக்குள் சில புதிய கொள்கைகள், அல்லது நடைமுறைகள் புகவேண்டுமென்பதே இதன் பொருள். தன் தலைவிதியைத் தானே நிர்ணயித்துக் கொள்ளும் உரிமை இந்தியாவுக்கு வேண்டும்.

தான் படித்த படிப்பினால், பிரிட்டன் எப்பொழுதும் பயனடைவதில்லை போலும். இப்பொழுது திருப்தியடைந்துள்ளஐர்லாந்து "எங்களுக்குச் சுயஆட்சி கொடுக்க ஏன் இவ்வளவுஆர்ப்பாட்டம்செய்யவேண்டு"மென்று இப்பொழுது பிரிட்டனைப்பார்த்துக் கேட்கிறது. ஐர்லாந்தில் அநுஷ்டிக்கப்பட்டதை விடக் கேவலமான முறை இந்தியாவிலும் அநுஷ்டிக்கப்படும்படி, பிரிட்டிஷார் இப்பொழுது அநுமதித்திருக்கின்றனர். உலகத்தின் மற்றத்தேசங்களைப்போல் இந்தியாவும் பிரிட்டிஷ் சாமான்களையே அதிகமாக விரும்புகிறது. ஆனால், தனக்கு, பிரிட்டிஷ் நீதி வழங்கப்படவேண்டுமென்று அது கேட்கிறது.

### பர்மா கலகம்

பர்மாவில் கலகம் அடியோடு ஓய்ந்தபாடில்லை. ஆனால் ஹன்ஸாடாவிலும் தாராவாடியிலும் நிலைமை சிறிது அபிவிருத்தியடைந்திருக்கிறது. தியேட்மியோ ஜில்லாவில் கொள்ளைகள் நடைபெற்று வருகின்றன. அரசாங்கப் படைகள் அங்குச் சென்றிருக்கின்றன. கீழ் பர்மாவிலுள்ள ஒரு கிராமத்தில் முப்பது கலகக்காரர்கள்வந்து அதைத் தாக்கினார்கள். இவர்கள் திருப்பித் தாக்கப்படவே, சுமார்இருபது கலகக்காரர்கள் கொல்லப்பட்டார்கள். புரோம் ஜில்லாவில் இதுகாறும் 957 கலகக்காரர்கள் சரணடைந்திருக்கின்றனர். அரசாங்கத்தாரால் கைதுசெய்யப்பட்டவர்களில் 1600 பேர் விடுதலை செய்யப்பட்டனர். இன்னும் 1700 பேர் சிறைகளில் இருக்கின்றனர். இவர்களில் பன்னிரண்டு ஸ்திரீகளும், பதினாறு வயதுக்குட்பட்ட ஆறு சிறுவர்களும் அடங்கி யிருக்கிறார்கள். டாங்கோ என்ற இடத்தில் ஒரு பர்மிய ஸ்திரீயைக் கொள்ளைக்காரர்கள் உயிரோடு கொளுத்தி விட்டார்கள்.

தியேட்மியோ ஜில்லாவில் 15, 16 தேதிகளில் மட்டும் பதினெட்டு கொள்ளைகளும், ஒரு கொலையும், இரண்டு கிராமவாசிகளின் கரசேதமும் நடைபெற்றிருக்கின்றன. ஒரு கிராமத்தில், கிராமவாசிகள், கலகக்காரரை எதிர்த்து நின்றார்கள். மேலே கூறப்பட்ட இரண்டு கிராமவாசிகளிடமிருந்து, ஒரு பெருந் தொகைபெற்றுக்கொண்டு பிறகு விடுதலை செய்து விட்டார்கள். ஷான்பிரதேசங்களில் 16-7-31 வரை 92 கலகக்காரர்கள் கைதுசெய்யப்பட்டிருக்கிறார்கள். சமீபத்தில் காயுக்தா என்ற ஊரில், கலகக்காரர்கள் நுழைந்து, இந்தியர் சிலரைக் கொன்று காயப்படுத்தி அவர்களுடைய பொருள்களைக் கொள்ளையிட்டுச் சென்றனர் என்று "ரங்கூன் மெயில்" பத்திரிகை கூறுகிறது. ஷான் பிரதேசத்தில் கலகத்திற்கு மூலகாரணமாயிருந்த ஒரு புங்கியைப் பிடித்துக் கொடுப்பவருக்குஆயிரம் ரூபா இனாம் கொடுக்கப்படுமென்று அறிவிக்கப் பட்டிருக்கிறது. தியேட்மியோ ஜில்லாவிலுள்ள தியேட்மியோ, மின்ஹாதா, மிண்டான் ஆகிய ஊர்களில் அதிகப் போலீஸ் படை வைத்துக் கொள்ள அரசாங்கத்தார் உத்திரவு கொடுத்திருக்கின்றனர். பர்மா கலகத்தை அடக்குவதற்குத் துணை செய்யும்பொருட்டு புனாவிலிருந்து சுமார் ஐந்நூறு பேருக்குமேல் அடங்கிய ஒரு படை 19-3-31-ல் புறப்பட்டிருக்கிறது.

### சர்வகட்சி மகாநாடு

இரண்டாவது சர்வகட்சி மகாநாடு கூடும் தேதியும் அதில் யாரார் புதிய அங்கத்தினராகச் சேர்க்கப்பட்டிருக்கிறார் என்ற விவரமும் இன்னும்வெளியாகவில்லை. ஆனால் மேற்படி மகாநாட்டின் ஐக்கிய அரசியல் நிர்மாணக்கமிட்டியின்கூட்டம்செப்டம்பர்மாதம் 5-ந் தேதி கூடுமென்றும், அதில் முன்னரே இருந்த பிரதிநிதிகளைத் தவிர கீழ்க் கண்டவர்களும் புதிதாக நியமிக்கப் பட்டிருக்கிறார்களென்றும் இந்தியா அரசாங்க அறிக்கையொன்று கூறுகிறது. புதிய அங்கத்தினர்கள் பெயர் வருமாறு:—மகாத்மாகாந்தி பண்டித மதன்மோகன மாளவியா, ஸ்ரீமான்எ. அரங்கசாமி ஐயங்கார், ஸர்புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸ், ஸர்மானச்ஜி தாதாபாய், ஸ்ரீமான் பெத்விக் லாரென்ஸ், லார்ட் ஹெயில்ஷாம், பரோடா மகாராஜா, ரீவாமகாராஜா, சாங்கிலி மகாராஜா.

காந்தியடிகள் லண்டனுக்குச் செல்லும் போது, அவருடன் ஸ்ரீமான்கள் மகாதேவ தேசாய், பியாரிலால், தேவதாஸ் காந்தி, ஸ்ரீமதி மீராபாய் ஆகியோர் செல்வர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

### எம். என். ராய் கைது செய்யப்பட்டார்

சமீபத்தில் ஜர்மனியிலிருந்து திரும்பிய ஸ்ரீமான் எம். என். ராய் இ. பி. கோ. 121 ஏ. பிரிவுப்படி, 21-7-31 காலை பம்பாயில் கைது செய்யப் பட்டார்.

ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியின் நிருவாகசபைக்கூட்டம் ஒன்று காசியில் 18-7-31-ல் ஜனாப் டி.கே.டி. ஷெர்வானியின் தலைமையில் நடைபெற்றது. ஐக்கிய மாகாணத்திலுள்ள பல பாகங்களிலும், டெல்லி ஒப்பந்தத்தைப்பற்றி அரசாங்கத்தார் சரியாக நடந்துகொள்ளவில்லையென்றும், காங்கிரஸ் ஸ்தாபனங்களைக் குலைக்க அவர் முயற்சி செய்வதைக் குறித்து வருந்துவதாகவும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. குடியானவர்கள் விஷயத்தில், அரசாங்க உத்தியோகஸ்தர்களும் ஜமீன்தார்களும் கொடுமையாகநடந்து கொள்வதையும், காங்கிரஸ் தொண்டர்கள் பெருவாரியாகக் கைதுசெய்யப்படுவதையும், 144-வது பிரிவுப்படி அறிக்கைகள் பிறப்பிக்கப்படுவதையும், 107, 108, 109 110-வது பிரிவுப்படி காங்கிரஸ் தொண்டர்கள்மீது வழக்குகள்தொடரப்படுவதையும், காங்கிரஸ் விஷயத்தில் அநுதாபமுடையவர்கள் துன்புறுத்தப்படுவதையும், சர்க்காரர் பொருள் கொள்ளை முதலியன செய்யப்படுவதையும் இக்கமிட்டியார் கவனித்து வருகின்றனர் என்ற ஒரு தீர்மானமும், இந்த கைய நிலைமை சகிக்கக்கூடாததாயிருக்கிறதென்றும், இந்த நிலைமை நீங்கும்படியாக, அகிலஇந்திய காங்கிரஸ் கமிட்டியார் முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டன. இரண்டாவது நாள் கூட்டத்தில் பண்டித மதன் மோகனமாளவியா பேசினார்.

## வகுப்புப் பிரச்னை

### காங்கிரஸ் தீர்மானத்தின் விளக்கம்

சென்ற வாரத்து "யங்இந்தியா" பத்திரிகையில் மகாத்மா காந்தி பின் வருமாறு எழுதுகிறார்:—

தேசத்தாரால் அங்கீகரிக்கப்படுவதற்குக் காங்கிரஸ் காரியக் கமிட்டியாரால் தயாரிக்கப்பட்ட திட்டமானது, டாக்டர் அன்சாரியினுடைய உழைப்பின் பலனே யாகும். பிறகு டாக்டர் அன்சாரி, சர்தார் சார்தூல் சிங், பண்டித மதன் மோகன மாளவியா ஆகிய மூவரும் அடங்கிய ஒருசப் கமிட்டியாரும் இதைப்பற்றிப் பரிசீலனை செய்தனர். இக்கமிட்டியாரும் அதிக உழைப் பெடுத்துக் கொண்டனர். வகுப்புப் பிரச்னை ஒரு விதமாகத் தீரவேண்டுமென்ற விஷயத்தில் டாக்டர் அன்சாரி அதிக கவலைகொண்டிருந்தார். அவர், கொள்கைப்படி நடந்து கொள்வதில் ஆவலுடையவராயிருக்கிறார். அவர் அரசியல் விஷயங்களில் சம்பந்தப்பட்டவராயிருந்தாலும் சரி, அல்லது காங்கிரஸ் தலைவராயிருந்தாலுஞ் சரி அவர், நண்பர்கள் கட்டாயப்படுத்துவதற் கிணங்கியே அவ்வேலையில் இறங்குகிறார். அவர்களுடைய விருப்பத்துக்கு இணங்க மறுக்க முடியாத அவ்வளவு தேசாபிமானம் அவரிடத்தில் ததும்பி யிருக்கிறது. வகுப்புப் பிரச்னையை எப்படியாவது தீர்த்து வைப்பதென்று அவர் முக்கியமாகப் பாடுபட்டார். இந்த முயற்சிகள் வெற்றியுறுமாக; உயர் குணங்கள், அநுபவத்திற்கு வரவேண்டுமானால் அவை மனித உருக்கொண்டே வரவேண்டி யிருக்கின்றன.

வகுப்புப் பிரச்னை ஒரு விதமாகத் தீரவேண்டிய அவசியத்தை ஒத்துக்கொண்டால், இப்பொழுது காரியக் கமிட்டியினால் விளக்கப்பட்டிருக்கும் திட்டம் நன்றாகவே இருக்கிறது. நாம் உண்மையான தேசிய வாதிகளாயிருந்தால், நமக்கு எந்த விததிட்டமும் வேண்டியதில்லை. நம்முள் மதவேற்றுமைகள் இருக்கலாம்; ஆனால் தேசம் என்ற முறையில் நாம் ஒன்றே. மத, சமூக வேற்றுமையின்றி, சட்டசபைப் பிரதிநிதிகளையும், அரசாங்க ஊழியர்களையும் நாம் தெரிந்தெடுப்போம். இந்தத் தத்துவத்தைக் கொண்டு நாம் பார்ப்போமானால், இந்தத் திட்டம் நம்முடைய வீழ்ச்சியையே குறிக்கிறது. ஆம்; நாம் வீழ்ச்சியடைந்து விட்டோம். நமக்குள் பரஸ்பரம் ஒருவர்க்கொருவர் அவநம்பிக்கையும் அச்சமும் இருக்கின்றன. ஆயினும், நாம் சுயராஜ்யம் வேண்டுமென்று விரும்புகிறோம். ஏனென்றால் அது நமது பிறப்புரிமை. இதனாலேயே, மத்தியஸ்தமான ஒரு திட்டத்தைக் காங்கிரஸ் விளக்கியது. மௌலானா ஷவுகத்அலி, காங்கிரஸ் காரியக் கூட்டத்தில் பிரசன்னமா யிருந்தபோது கோபத்துடன் பின்வருமாறு கூறினார்:— "எனக்கென்ன வேண்டு மென்று என் அடிக்கடி கேட்கிறீர்கள்? எனக்கு என்னவேண்டு மென்பதைப்பற்றி நான் ஏற்கெனவே கூறியிருக்கிறேன். நீங்கள் என்ன கொடுப்பீர்கள் என்பதை ஏன் எனக்குச் சொல்லக்கூடாது?" இந்த வார்த்தைகள், காங்கரஸ்கமிட்டி அங்கத்தினர்கள் மனதில் நன்றாகப்பட்டன. காங்கிரஸ் தேசிய வாதக் கொள்கை பயனற்றதென்று நன்கு புலப்பட்டுவிட்டது. ஆனால் முஸல்மான்களின் பிரதிநிதியென்று மௌலானா ஷவுகத்அலி கூறிக்கொண்டது மறுக்கப்பட்டது. ஆதலின் காங்கிரஸ் என்ன அளிக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள அவர் உரிமையுடையவரா யிருந்தார். தேசிய வாதக்கொள்கையை அவலம்பிக்கும் சீக்கியர்கள், முஸல்மான்கள், ஹிந்துக்கள் முதலியோர் அங்கீகரிக்கக்கூடிய ஒரு திட்டத்தைக் காங்கிரஸ் அளிக்கக்கூடியதாயிருக்கிறது. இதன் பயனாகவே, இப்பொழுதுள்ள திட்டம் உருவாக வெளிவந்தது.

விருப்பமில்லாதவர்கள் விஷயத்தில் இந்தத் திட்டத்தைப்புகுத்தக் காரியக்கமிட்டிக்கு விருப்பமில்லை: மேலே கூறப்பட்ட மூன்று வகுப்பினரும் ஒன்று சேர்ந்து வேலை செய்ய வேண்டியவர்களாயிருக்கிறார்கள். ஆதலின் அந்தந்த வகுப்புத் தலைவர்கள், தத்தம் சமூகத்தின் உருப்படியான அபிப்பிராயத்தைத் திரட்டவேண்டும்.

#### ஹிந்துக்களுக்கு ஒரு வேண்டுகோள்

ஹிந்துக்களுக்கு ஒரு வார்த்தை. நாம் பெரும்பான்மையான சமூகத்தினர். முஸல்மான்களும் சீக்கியர்களும் பலசாலிகள் என்றும் அவர்கள் முன் நாம் குறுகிய வடிவினர் என்றும் நமக்குத் தோன்றினால், நாம் சட்டசபைகளுக்குள் புகவே முடியாது. நாம் வளர்ச்சியடையவேண்டுமானால், அச்சத்தை ஒழிக்கவேண்டும். தைரியம் என்பது மனதைப் பொறுத்தது; தேகத்தைப் பொறுத்ததல்ல. மிருந்த பலசாலிகள்கூட சில சமயங்களில் மருட்சியடைவதுண்டு. தேகத்தை நடுங்கச் செய்வது ஹிருதயமேயாகும், ஆதலின் தைரியமாகமுன்னின்று, முஸல்மான்களும் சீக்கியர்களும் கேட்பதை அளிப்போமாக. இதை அஹிம்சை என்ற தராசில் நிறுத்துப் பார்த்தால், அன்பு என்று பெயராகும். இந்தத் திட்டத்தினால், ஹிந்துக்கள் விழிப்படைவார்களானால் அது போதும். தேசிய வாதிகளா யில்லாத சீக்கியர்களும் முஸல்மான்களும் இந்தத் திட்டத்தை நிராகரித்துவிட்டாலும் பாதகமில்லை.

இந்தத் திட்டத்தை எவ்வித மறுப்புமின்றி ஹிந்துக்களாகிய நாம் அங்கீகரித்துக்கொண்டால், சீக்கியர்களும் முஸல்மான்களும் ஏற்றுக்கொள்ளக்கூடிய மற்றொரு திட்டத்தையும் நாம் அங்கீகரிக்கச் சித்தமா யிருப்போம்.

காங்கிரஸ் தனது இலட்சியத்தை யடைவதில் தவறிவிட்டிருந்த போதிலும், அது தேசியத்தையே தன் முழு இலட்சியமாக முதலிலிருந்து கொண்டிருந்தது. வகுப்பு வேற்றுமைகளை உடைக்க அது முயன்றிருக்கிறது. லாகூர் காங்கிரசில் வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட தீர்மானம் இதன் பரிணாமமாகும். எனவே, வகுப்புப் பிரச்னையைத் தீர்த்துவைப்பதற்கு வகுப்பு வேற்றுமையை உண்டாக்கக்கூடிய ஒரு பரிகாரத்தையளிக்க அதனால் முடியாது. ஆனால் தேசத்தின் இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில், பார்வைக்கு வகுப்புச் சம்பந்தமானதாக இருந்தபோதிலும் கூடியவரையில் தேசியமானதாக இருக்கக்கூடிய ஒரு திட்டத்தை காங்கிரஸ் தேசத்தாரின் அங்கீகாரத்திற்கு விளக்கியிருக்கிறது.

## தொண்டர் ஸ்தாபனம்

### காரியக்கூட்டத் தீர்மானம்

சென்ற வார "யங் இந்தியா" பத்திரிகையில் மகாத்மா காந்தி பின் வருமாறு எழுதுகிறார்:—

டெல்லி ஒப்பந்தத்தைப்பற்றிய பேச்சுகள் நடைபெற்றுக்கொண்டிருந்தபோது தவிர, சென்றவாரத்தில் நடைபெற்ற காங்கிரஸ் காரியக்கூட்டமே அது நீடித்து நடைபெற்றதாகும். சென்ற வாரத்துக்கூட்டத்தில்நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை நோக்கினால், கூட்டத்திற்குச் செலவழிக்கப்பட்ட காலம் வீணாக்கப்படவில்லை யென்பது நன்கு புலனாகும். தவிர, ஒப்பந்த நிறைவேற்றத்தைப் பற்றி ஆலோசிப்பதில் நீண்டநேரம் செலவழிக்கப்பட்டது. வகுப்புப்பிரச்னைக்கு அடுத்தபடியாகத்தொண்டர்ஸ்தாபனத்தைப்பற்றிய தீர்மானம் முக்கியமானது.

ஹிந்துஸ்தானி சேவாதளம் இனிக் காங்கிரஸ் ஸ்தாபனமாகிவிடும். அதன் வேலைகள் என்னவென்று நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. தொண்டர் ஸ்தாபனங்கள் இனி கண்டபடி வளர்ச்சி யடையா. மாகாண காங்கிரஸ் கமிட்டியார், தங்கள் கடமையைச் சரியாக நிறைவேற்றி வருவார்களேயானால், தொண்டர் ஸ்தாபனத்தில் இனி ஒழுங்கற்ற தன்மையே இராது. காங்கிரஸ் காரியக்கமிட்டி, தனக்குத் தெரியாத ஒரு ஸ்தாபனத்துக்கு வருஷந்தோறும் ஒரு தொகை அளித்துவந்ததோடு இனியும் திருப்தியடைந்துவிடாது. அது மேற்படி ஸ்தாபனத்தைப் பண்டித ஜவஹரிலால் நேரு தலைமையில் ஒழுங்குபடுத்தி, பயிற்சிபெற்ற உத்தியோகஸ்தர்களை மாகாண ஸ்தாபனங்களுக்கு அளிக்கும். மாகாண ஸ்தாபனங்கள் எங்ஙனம் நடந்துகொள்ளவேண்டுமென்பதைப்பற்றியும் தெரியப் படுத்தும். மாகாண ஸ்தாபனங்கள், எவ்வித பொறுப்புமின்றித்தனி உரிமைபெற்றிருக்கும். ஆனால் மனப்பூர்வமான உறுதியில்லாமற் போனால், எந்த அமைப்பும் ஒழுங்குடனே திறமையுடனே நடக்கமுடியாது.

## தொண்டர்களும் மறியலும்

"யங்இந்தியா" பத்திரிகையில் காந்தியடிகள் எழுதுவது வருமாறு:—

ஓரிடத்தில் ஐந்து பேருக்குமேல் மறியல் செய்யவேண்டிய அவசியமில்லை என்று சில வாரங்களுக்குமுன் நான் எழுதியிருந்ததைத் தென்னிந்தியாவிலுள்ள சில அதிகாரிகள் ஆதாரமாக எடுத்துக்கொண்டு அதை அஷ்பிரயோகம் செய்கிறார்கள் என்று ஒரு நிருபர் எனக்குத் தெரிவிக்கிறார். எந்த இடத்திலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் ஐந்து தொண்டர்களுக்குமேல் சேர்ந்து மறியல் செய்யக்கூடாதென்று அதிகாரிகள் உத்தரவு செய்திருக்கிறார்களாம்.எனவே,ஒரு வழிக்கு அதிகமாயுள்ள மதுபானக் கடைகளில்கூட ஐந்து தொண்டர்களுக்கு அதிகமாக அநுமதிக்கப்படுவதில்லை. என்னுடைய உத்தேசப்படி, ஒரு வழிக்கு ஐந்து பேருக்குமேல் இருக்கக்கூடாதென்பதேயாகும். ஒரு வழியுள்ள இடங்களுக்குக்கூட ஐந்து தொண்டர்களுக்கு அதிகமான பேர் இருக்கவேண்டிய அவசியத்தை நான் உணராமலில்லை. கடை இருக்கப்பட்ட நிலையை உத்தேசித்துத் தொண்டர்களின் தொகையும் இருக்கிறது.

## கதர்ப் பிரசாரம்

### ஒரு நிருபரின் சந்தேகங்கள்

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் மகாத்மா காந்திக்கு ஒரு நிருபர் பின்வருமாறுஎழுதியிருக்கிறார்:-

"கதர்ப் பிரசாரத்தைப்பற்றி, கராச்சி காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் எப்படி அதற்கு உதவிசெய்யும் என்பதை எனக்குத் தெரிவிப்பீர்களா? மில் சொந்தக்காரர்கள், தாங்களே கதர் தரிப்பதன் மூலமாக, கைராட்டினத் தொழிலுக்குத் தங்களுடைய ஆதரவைத் தரவேண்டுமென்று தீர்மானத்தில் கூறப்பட்டிருக்கிறது. தங்கள் மில் தொழிலை அபிவிருத்தி செய்வதற்கு எவ்வித நிர்ப்பந்தமுமின்றி, மில் முதலாளிகள் இருந்துகொண்டுவந்தால், அவர்கள் கதரைத் தரிப்பதனால் மட்டும், கதர் இயக்கத்துக்கு ஆதரவு ஏற்பட்டு விடுமா? மில்லும் கைராட்டினமும் முரண்பட்டன வென்பதை மில் முதலாளிகள் உணர்ந்து, தங்களுடைய மில் வியாபாரத்தைச் சிறுகச் சிறுகச் சுருக்கிக்கொண்டு வந்தால்தான், கதர் இயக்கத்திற்கு ஆதரவு தந்தவர்களாவார்கள். மில்கள், மெல்லிய இழைகளாலாய துணியைச் சரசவிலையில் உற்பத்திசெய்து கொண்டு போனால், கதர் எப்படி அபிவிருத்தி யடையும் என்று கேட்கிறேன். தவிர, மில் துணிகளைக் குறைந்த விலைக்கு விற்கும்படி செய்தால், அது கதரைக் கொலை செய்வதே யாகும்."

#### காந்தியடிகள் சமாதானம்

இவைகளெல்லாம் நல்ல கேள்விகள் தான். மில் சொந்தக்காரர்கள், மனப்பூர்வமான நம்பிக்கையுடன் கதரைத் தரியாவிட்டால், அதனால் பயனில்லையென்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். கதரிடத்தில் உண்மையான நம்பிக்கை அவர்களுக்கு இருந்தால், அதற்கு இடையூறு செய்யாமலே, தங்கள் மில் தொழிலை வளர்த்துக்கொண்டு செல்லலாம். கதருக்கும் மில் துணிக்கும் இடையிலுள்ள இந்த மாறுதல் காலத்தில், மில்கள் துணை செய்யும் என்பதற்காகவே, அவைகளைக் காங்கிரஸ் ஆதரிக்கிறது. சுதேசி மில்கள், கதர் இயக்கத்துடன் ஒற்றுமைப் பட்டுழைத்தால், அந்நியத் துணி பகிஷ்காரம் மிக எளிதில் முடிந்துவிடும். சுதேசி மில்கள் அதிகமாவதைக் கண்டு கதர் அபிமானிகள் பயப்படவேண்டியதில்லை. மில் அபிவிருத்தியைக் கொண்டு, கதரின் பொருளாதார நன்மையை நாம் இன்னும் உணரவில்லை யென்பது ஒருவாறு உண்மைதான். ஆனால் கதர் எங்கும் பரவிவிட்டால், மில்களுக்கு வேலை யில்லாமலே போய்விடும். கதர் இங்ஙனம் எங்கும் பரவுமா என்பதைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டுவதில்லை. அது பரவுவது தொண்டர்களின் ஊக்கத்தைப் பொறுத்திருக்கிறது. கிராமவாசிகளுக்கு உண்மையான நிலைமையைத் தெரிவித்து, அவர்களுடைய தேசிய உணர்ச்சியை நல்ல வழியில் திருப்பிக் கதரினால் தேசத்தில் வறுமை யொழிந்துபோகு மென்பதை உணர்த்தினால், கதர் சீக்கிரத்தில் எங்கும் பரவிவிடும் என்பது நிச்சயம்.

மில்கள், மெல்லிய துணிகளை உற்பத்தி செய்கின்றன வென்பதைப்பற்றி நாம் கவலை கொள்ளவேண்டியதில்லை. கதர் காலத்தில் மெல்லிய கதர்கள் கிடைத்துக் கொண்டுதானிருந்தன. இப்பொழுதுகூட, மெல்லிய கதர் துணிகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆனால் சிறிது கிராக்கியாக விற்கப்படுகிறது. ஆதலின், இந்த மாறுதல் காலத்தில், மில்கள், மெல்லிய துணிகள் உற்பத்தி செய்வதை நாம் ஆதரிக்கவேவேண்டும். இதனால் கதருக்கு நன்மையே உண்டாகும். இதில் விசனிக்கத்தக்கது என்னவென்றால், மில்கள், தேசியக் கோரிக்கைகளுக்குத் தகுந்தபடி இணங்குவதில்லை யென்பதே யாகும்.

விலையைப்பற்றி நிருபர் குறிப்பிடுகிறார். கதர், உயிர்பெற்று வாழ்வதற்காக மில் துணிகள் அதிக விலையில் விற்கப்படவேண்டுமென்று நிருபர் யோசனை கூறவில்லையென்றே கருதுகிறேன். கதர் இயக்கத்தைத் துவக்கிய எனக்கு இந்த யோசனை தோன்றவேயில்லை. சாதாரண பொருளாதார சாஸ்திரத்திற்கும், கதர் பொருளாதார சாஸ்திரத்திற்கும் வேற்றுமை உண்டு. முன்னது மனிதத் தன்மையைக் கவனிப்பது; பின்னது அப்படியில்லை. முன்னது சுயநலமுள்ளது; பின்னது சுயநலமற்றது. கதர் விஷயத்தில் போட்டியாவது, விலை உயர்வாவது முக்கியமில்லை.ஹோட்டல்களும், வீட்டிலுள்ள சமையலறைகளும் எப்பொழுதும் போட்டி போடுவதேயில்லை. வீட்டெஜமானி சமையல் செய்வதற்கு என்ன செலவாகிறது, இடம் எவ்வளவு வேண்டுமென்பதைப் பற்றிக் கவனிப்பதேயில்லை. பிள்ளைகளை வளர்ப்பது எப்படி தன் கடமையோ அப்படியே சமையல் செய்வதும் தன் கடமை யென்று அவள் கருதுகிறாள். அவள் செலவு முதலிய வற்றைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டு போனால்,முடிவில் சமையலறையைக் கலைத்துப்போடவேண்டியதுதான். இத்தகையோர் சிலர் இல்லாமலில்லை. ஆனால் இவர்கள் தொகை விருத்தியடையவில்லை. கைராட்டினத்தை நாம் எப்பொழுது புறக்கணிக்கத் தொடங்கினோமோ அப்பொழுதே, இந்திய சமூகத்திற்குப் பாவமிழைத்தோம் என்பதை நமது சோம்பேறித்தனம் உணரவிடாமல் தடுத்து நிற்கிறது. அதற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டு மீண்டும் கைராட்டினத்தைச் சுற்றத் தொடங்குவோமாக.

## உப்பு உபயோகம்

மகாத்மா காந்தி பின்வருமாறு எழுதுகிறார்:—

டெல்லி ஒப்பந்தத்தில் உப்பு எடுத்துக் கொள்ளும் விஷயத்தைப்பற்றி என்னகூறப்பட்டிருக்கிறதோ அதன்படி மிர்பூர், கல்ப்பாக் என்ற இடங்களிலுள்ள ஜனங்கள் நடந்துகொள்ளாமையினால், அரசாங்கத்தார் இந்த உப்பெடுக்கும் சௌகரியத்தை அங்கு வாபீஸ் வாங்கிக்கொண்டு விட்டார்கள் என்று கேள்விப்படுகிறேன். ஜனங்கள் மணக்குக் கணக்காக உப்பைத் திரட்டி ஒட்டகங்களின் மேல் எடுத்துச் சென்றனராம். இஃதுண்மையாயிருந்தால், ஒப்பந்தத்திற்கு விரோதமேயாகும். இந்த அற்பத் தவறுக்கு அரசாங்கத்தார் மிகக் கடுமையாக நடந்து கொண்டார்களா இல்லையா யென்பது, முழு விவரங்கள் அறிந்துகொண்ட பிறகே கூற முடியும். சென்னை மாகாணத்தில், சிலர் உப்பு உற்பத்தி செய்து, வண்டிகளில் எடுத்துச் சென்றார்களாம். இவர்கள் கைது செய்யப்பட்டார்கள். வண்டிகளில் உப்பெடுத்துச் செல்வது தவறே யாகும். ஆனால், அரசாங்கத்தார், இவ்விஷயத்தில் எச்சரிக்கை செய்து அதனுடன் நின்றிருக்கக்கூடாதா? இதுபோன்ற விஷயங்கள் சம்பந்தமாக, உண்மையான விவரங்களைப் பொறுப்புள்ள காங்கிரஸ் தலைவர்கள் எனக்கனுப்பினால் நன்றாயிருக்கும். கிராமவாசிகள், தங்கள் குடும்ப உபயோகத்திற்காகவும், எவ்வளவு தூரம் நடந்து செல்ல முடியுமோ அவ்வளவு தூரத்திற்குள் விற்பனை செய்யவும் உப்பை எடுக்கலாம் என்று டெல்லி ஒப்பந்தம் கூறுகிறது. இந்த ஒப்பந்தப்படி, மனிதர்களே உப்பை எடுத்துச் சென்று விற்பனை செய்யலாம். கை வண்டிகூட உபயோகிக்கக்கூடாது. தோள்மீதோ தலைமீதோ ஒருவன் எடுத்துச் செல்லலாம். டெல்லி ஒப்பந்தத்தை மீறி நடக்கிறவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளு முன்னர், அரசாங்கத்தார் எச்சரிக்கை செய்வர் என்று எவரும் எதிர்பார்க்கக்கூடும். இந்த உப்பு உற்பத்தியில் கோடிக்கணக்கான கிராமவாசிகள் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். இவர்கள், அவ்வப்பொழுது அரசாங்கத்தாரால் செய்யப்படும் விதிகளைத் தெரிந்துகொண்டிருப்பார்கள் என்று எதிர்பார்ப்பது சரியாகாது. வட இந்தியாவிலாவது, தென்னிந்தியாவிலாவது, ஜனங்கள் வேண்டுமென்றே இந்த விதிகளை மீறி நடந்திருந்தார்களானால் அதற்காக நான் ஆச்சரியமே படுவேன். எப்படி யிருந்தபோதிலும், காங்கிரஸ்காரர் எச்சரிக்கை யுடனிருக்கட்டும். சரியானபடி நடந்துகொள்ளுமாறு இவர்கள் கிராமவாசிகளுக்குச் சொல்லவேண்டும்.

"யங்இந்தியா"

## மதுபான விற்பனை செய்வோருக்கு ஒரு வேண்டுகோள்

காந்தியடிகள் பின்வருமாறு எழுதுகிறார்:

இப்பொழுது மதுபான விற்பனைக்கு ஏலம் போடும் காலம். ஏற்கெனவே "யங் இந்தியா" பத்திரிகையில் எழுதியிருப்பதை உத்தேசித்து, அரசாங்க அதிகாரிகள் ஏலத்தை நிறுத்தவோ, அல்லது கட்டுப்படுத்தவோ செய்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், மதுபான வியாபாரிகள் எதிர்காலத்தை நோக்கி நடந்துகொள்ளமாட்டார்களா? மதுவிலக்கும் அந்நியத்துணி பகிஷ்காரமும் தேசத்தின் நிரந்தரமான கொள்கைகள். முதலாவது ஒழுக்கத்திற்கு இன்றியமையாதது; இரண்டாவது பொருளாதார நன்மைக்கு இன்றியமையாதது. ஆனால் இரண்டும் அரசியல்நன்மையைத் தருவனவாகும். அரசாங்கத்தார் பூரண மதுவிலக்கு முறையை அநுசரிக்கிறவரை, அமைதியான முறையில் மறியல் வேலை நடந்துகொண்டுதானிருக்கும். அது சிறந்த படிப்பினையாகும். "யங் இந்தியா"



# இந்தியாவின் கடன் பொறுப்பு

## காங்கிரஸ் கமிட்டியின் அறிக்கை

இவ்வருஷம் கராச்சியில் நடைபெற்ற காங்கிரசில் "கிழக்கிந்தியக் கம்பெனியாரும் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும் செய்திருக்கும் பணசம்பந்தமான கொடுக்கல் வாங்கல்களைக்குறித்தும் இந்தியாவின் பொதுக் கடன் என்று சொல்லப்படுவதைப் பற்றியும் பரிசீலனை செய்து, இனிமேல் இங்கிலாந்தினாலாவது, இந்தியாவினாலாவது எவ்வளவு தொகை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்பதைப்பற்றி ஓர் அறிக்கை தயாரிக்க வேண்டுமென்று" தீர்மானிக்கப்பட்டு, இதற்காக ஒரு கமிட்டியும் நியமிக்கப்பட்டது. ஸ்ரீமான்கள் டி. என். பகதூர்ஜி, கே. டி. ஷா, பாலுபாய் தேசாய், ஜே. சி. குமரப்பா ஆகியோர் இக்கமிட்டியில் அங்கத்தினரா யிருந்தனர்.

அறிக்கை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பிரிவில், கிழக்கிந்தியக் கம்பெனியின் நிருவாக காலத்தில் நடைபெற்ற சம்பவங்களைக் குறிப்பிட்டுப் பேசுகிறது. இதில், இந்திய சிப்பாய்க் கலககாலத்தில் செலவழிக்கப்பட்ட தொகையும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இரண்டாவது பாகத்தில், பிரிட்டிஷ் அரசாங்கத்தின்கீழ் ஏற்பட்ட கடன் விஷயங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

### கிழக்கிந்தியக் கம்பேனி

சாதாரண ஒரு வியாபாரக் கம்பெனியாயிருந்த இந்தக் கிழக்கிந்தியக் கம்பெனியார், சுமார் 200 வருஷங்களுக்குள் எப்படி ஓர் ஆளுங் கூட்டத்தினராக மாறினர் என்பதைப்பற்றி அறிக்கையின் முதற்பாகத்தில் சுருக்கமாகக் குறிப்பிட்டிருக்கின்றனர். கம்பெனியாரின் வரவு செலவுகளைப் பரிசீலனை செய்வது மிகவும் கஷ்டமா யிருக்கிறது. ஏனென்றால் வியாபாரத்தின் மூலமாக ஏற்பட்ட வரவு செலவுகளையும், இராஜ்ய விஸ்தீரணத்தின் மூலமாக ஏற்பட்ட வரவு செலவுகளையும் ஒன்றாகச் சேர்த்திருக்கின்றனர் என்பதே இதற்குக் காரணம். 1857-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 30-ந்தேதி—அதாவது இந்தியச் சிப்பாய்க் கலகத்திற்கு முன்னர்—இந்தியாவின் பொதுக்கடன் 510 லட்சம் பவுனாயிருந்தது. இந்தக் கடனுக்குக் காரணமா யிருந்த முக்கிய சம்பவங்களும் அவைகளுக்காக ஏற்பட்ட செலவும் வருமாறு:—

| | |
|---|---|
| முதல் ஆப்கன் யுத்தம் | 150 லட்சம் |
| இரண்டு பர்மிய யுத்தங்கள் | 40 லட்சம் |
| சைனா, பர்ஷியா, நேபாளம் இவைகள்மீது படையெடுப்பு | 60 லட்சம் |

இந்தப் படையெடுப்புகளுக்கு இந்தியாவின் மீது செலவைச் சுமத்துவது தவறு என்று ஸர் ஜார்ஜ் விங்கேட் என்பார் எழுதிய "இந்தியாவுடன் நமது வரவு செலவு சம்பந்தம்" என்ற நூலிலிருந்து சில பாகங்களை எடுத்துக் கமிட்டியார் காட்டியிருக்கின்றனர்:—

"நமது ஏகாதிபத்தியத்திற்குப் புறம்பானதாக ஆசியா கண்டத்திலுள்ள நாடுகளுடன் நாம் செய்த யுத்தங்களில் பெரும்பாலன, இந்தியா அரசாங்கத்தின் ஆள் பலம், பணபலம் ஆகிய இவைகளைக் கொண்டுதான். பெரும்பாலும் பிரிட்டிஷாரின் நன்மைக்காகவே இந்த யுத்தங்கள் நடைபெற்றிருக்கின்றன. இந்தியாவின் நன்மைக்கும், இந்த யுத்தங்களுக்கும் எங்கேயோ தூர சம்பந்தமிருக்கும். அப்பொழுது ஆண்ட பிரிட்டிஷ் மந்திரிமார்களின் உத்திரவுக் கிணங்கியே இந்தியா அரசாங்கத்தார் இந்த உத்திரவுகளைச் செய்தனர். இதனால், பிரிட்டிஷ் சமூகத்தாரே இந்த யுத்தங்களுக்குப் பொறுப்பாளிகள் என்பது நன்கு புலனாகிறது. இவைகளில் மிகப் பிரபலமடைந்தது ஆப்கன் யுத்தம். கிழக்கிந்தியக் கம்பெனியாரின் ஆலோசனை யின்றியும், அவர்களுடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாகவும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்த யுத்தத்தைத் தொடங்கினர். உண்மையில், இஃதொரு பிரிட்டிஷாரைப் பொறுத்த யுத்தமே. ஆதலின் இதற்கான செலவுகளை இந்தியா அரசாங்கத்தின் மீது சுமத்தக்கூடாதென்று கிழக்கிந்தியக் கம்பெனி டைரக்டர் முதலியோர் கூறியும் கேளாமல், பிரிட்டிஷ் மந்திரிமார் இந்தியா அரசாங்கத்தார்மீது இச்செலவைச் சுமத்தினர். இந்தியாவுக்குச் சம்பந்தமில்லாத காரணத்திற்காக, பாரசீக யுத்தத்தைப் பிரிட்டிஷ் மந்திரிகள் தொடங்கினார்கள். ஆயினும் இதற்கு, இந்தியாவின் துருப்புகளும் பணமுமே உபயோகிக்கப்பட்டன. கடைசியில், இந்த யுத்தச்செலவில் பாதி பாகத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஏற்றுக்கொள்வதென்று தீர்மானிக்கப்பட்டது."

எனவே, மேலே கூறப்பட்ட 350 லட்சம் பவுன் செலவையும் பிரிட்டனே ஏற்றுக்கொள்வேண்டுமென்று கமிட்டியார் முடிவு செய்கின்றனர். 1858-ம் வருஷத்தில் இந்தியாவிலுள்ள பிரதேசங்களின் சுவாதீனத்தையும் ஆட்சிப் பொறுப்பையும் கிழக்கிந்தியக் கம்பெனியார் இழந்துவிட்டனர். இதற்காக இவர்கள்போட்ட மூலதனத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ள உரிமை பெற்றிருந்தனர். ஆனால் இந்தமூலதனம் 1874-ம் வருஷம்வரை இவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படவில்லை ஆதலின் இந்த 1874-ம் வருஷம்வரை, கம்பெனியாருக்கு, இந்தியாவின் வரிப்பணத்திலிருந்து வருஷத்தில் நூற்றுக்கு $10\frac{1}{2}$ வீதம் ஈவு கொடுத்துக்கொண்டு வந்தனர். இது சம்பந்தமாக இந்தியாவுக்கு ஏற்பட்ட செலவு வருமாறு;—

| | | |
|---|---|---|
| வட்டிப்பணம் | 1833-1857 | 15120000 |
| " | 1858-1874 | 10080000 |
| மூலதன இருப்பு | — | 12000000 |
| | பவுன் | 37200000 |

இந்தச் செலவு, கிழக்கிந்தியக் கம்பெனி நிருவாகஸ்தர்களுக்கும், பிரிட்டிஷ் பொது ஜனங்களுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தமேயாகும். இதில் இந்திய மகாஜனங்களின் சம்மதமோ அபிப்பிராயமோ கேட்கப்படவில்லை. ஆதலின் இந்தச் செலவுகளுக்கு இந்தியர்கள் பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டியதில்லை என்று கமிட்டியார் அபிப்பிராயப்படுகின்றனர்.

### சிப்பாய்க்கலகத்தின் செலவு

இந்தியச் சிப்பாய்க் கலகத்திற்காக ஏற்பட்ட செலவு 400 லட்சம் பவுனும் இந்தியாவின் பொதுக் கடனுடன் சேர்க்கப்பட்டது. பிரிட்டிஷார் சரியாக நிருவாகம் நடத்தத் தெரியாமையினாலேயே இந்தக் கலகம் ஏற்பட்டதென்றும் ஆதலின் இந்தச் செலவைப் பிரிட்டிஷாரே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கமிட்டியார் கருதுகின்றனர். நிருவாகம் சரியாக நடத்தவில்லையென்ற காரணம் ஒருபுறமாயிருந்த போதிலும், இந்தச் சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகுதான், இந்தியாவை, பிரிட்டிஷார் மீண்டும் ஜெயித்தனர் என்று கருதப்படவேண்டுமாதலின் இந்தச் செலவைப் பிரிட்டனே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற மற்றொரு காரணத்தையும் கமிட்டியார் கூறுகின்றனர். 1872-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 8-ந்தேதி இந்தியா மந்திரி கைப்பட எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்;—

"சக்ரவர்த்தியின் இராஜ்யத்தின் வேறெந்தப் பாகத்திலாவது, இவ்வித சம்பவம் ஏற்பட்டிருந்தால், அதற்கான செலவில் பெரும்பாகத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரே ஏற்றுக்கொள்வர். ஆனால் இந்திய சிப்பாய்க் கலகத்தைப் பொறுத்தமட்டில், அதற்கான தொகையை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் செலுத்தவில்லை. அதன் செலவையெல்லாம் இந்திய வரி செலுத்துவோரே செலுத்தினர்; செலுத்துகின்றனர்."

தென்னாப்பிரிக்காவில் போயர் யுத்தம் நடைபெற்றபோது, அதன் செலவுகளையெல்லாம் பிரிட்டனே ஏற்றுக்கொண்டது. அது மாத்திரமா? சீரழிந்துபோன நிலங்களைப் பண்படுத்திக் கொள்ளும் பொருட்டுப் போயர்களுக்கு 30 லட்சம் பவுன் கொடுத்து உதவினர்.

ஆதலின், கிழக்கிந்தியக் கம்பெனியின் நிருவாக காலத்தில் இந்தியாவுக்கு மொத்த, மாக ஏற்பட்ட கடன் தொகை வருமாறு:—

| | |
|---|---|
| முதல் ஆப்கன் யுத்தம் | 15000000 |
| இரண்டு பர்மிய யுத்தங்கள் | 14000000 |
| சைனா, பர்ஷியா முதலியவைகளின் மீது படையெடுப்பு | 6000000 |
| கம்பெனியின் மூலதனம் | 37200000 |
| சிப்பாய்க் கலகத்தின் செலவு | 40000000 |
| பவுன் | 112, 200,000 |

### 1858-ம் ஆண்டுக்குப் பின்னர் யுத்தங்கள்

1858-ம் ஆண்டுக்குப் பின்னர், பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் நேரான நிர்வாகத்திற்கு இந்தியா உட்பட்டது. இந்தக் காலத்திலிருந்து, ஐரோப்பிய மகாயுத்தம் வரை ஏற்பட்ட செலவுகளைப்பற்றி, அறிக்கையின் இரண்டாவது பாகம் விஸ்தரித்துக் கூறுகிறது. 1867-ம் வருஷம் ஏற்பட்ட அபிசீனியச் சண்டையால் இந்தியாவுக்கு 60 லட்சம் பவுன் செலவாயிற்று; பேராக் படையெடுப்பினால் 41000 பவுன் செலவாயிற்று; 1878-ம் வருஷத்து ஆப்கன் யுத்தத்தினால் 175 லட்சம் பவுன் செலவாயிற்று. 1882-ம் வருஷத்து எகிப்துபடையெடுப்புக்காக 12 லட்சம் பவுன்; 1882–92 வருஷங்களில் வடமேற்கு மாகாணத்தின் மீது படையெடுப்புக்கு 130 லட்சம் பவுன்; 1886-ம் வருஷத்தில் நடைபெற்ற பர்மிய படையெடுப்புக்கு 4705000 பவுன்; 1896-ம் வருஷத்துச் சூடான் படையெடுப்புக்கு $37\frac{1}{2}$-கோடி ரூபாய் செலவாயிருக்கின்றது. இந்த யுத்தங்களும் படையெடுப்புகளும் இந்தியாவின் நன்மைக்காகச் செய்யப்பட்டவை யல்ல; ஏகாதிபத்தியத்தின்நன்மைக்காகவேஎன்பது வெளிப்படை. இந்த அபிப்பிராயத்தை ஆதரித்துப் பல அரசியல் நிபுணர்கள் பேசியிருக்கிறார்கள். உதாரணமாக 1882-ம் ஆண்டில் இந்தியா மந்திரி பின்வருமாறு கூறியிருக்கிறார்:—

"மேலே கூறப்பட்ட யுத்தங்கள் யாவும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உத்தரவுப்படியே நடைபெற்றன. பிரிட்டிஷாருடைய வியாபார நன்மை, பிரிட்டிஷ் வியாபாரிகளின் குறைகள், பிரிட்டிஷ் முடியாட்சியின் கௌரவம் முதலியவைகளே இந்த யுத்தங்களுக்கு முக்கிய காரணங்களாக இருந்தன."

ஸ்ரீமான் கிளாட்ஸ்டன் ஆப்கன் யுத்தத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறினார்:—

"ஆப்கன் யுத்தம், பிரிட்டிஷ் அரசாங்கத்தார், தாமே நேரில் நடத்திய ஒரு யுத்தம்போன்றதே யாகும். இந்த யுத்தத்தின் பயனாக ஏற்பட்ட செலவில் பெரும்பாகம், பிரிட்டனே ஏற்றுக்கொள்ளவேண்டும்"

### ஐரோப்பிய யுத்தம்

1914-ம் வருஷத்தில் தொடங்கப்பட்ட ஐரோப்பிய யுத்தத்தில் நேர்ந்த செலவுகளைப்பற்றிக் கமிட்டி பிறகு ஆராய்ச்சி செய்கிறது. உத்தியோகஸ்தர்களையே பெரும்பான்மையோராகக் கொண்ட பழைய இந்தியா சட்டசபையிலே நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தின்படி, இந்தியா அரசாங்கத்தாரால் பிரிட்டனுக்கு இரவல் கொடுக்கப்படும் துருப்புகளின் செலவை இந்தியா அரசாங்கத்தார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றிருந்தது. பிறகு, மற்றொரு தீர்மானத்தினால், துருப்புகளின் பொருட்டு ஏற்படும் போக்குவரவு செலவுகளையும் இந்தியாவே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றிருந்தது. பின்னர், 1917-ம் வருஷம் மார்ச்சு மாதம், ஐரோப்பிய யுத்தத்தின் பொருட்டு பத்துகோடிபவுன் இந்தியா நன்கொடையாகக் கொடுக்க வேண்டுமென்று இந்தியா அரசாங்கத்தார் யோசனை கூறினர். இதுதவிர, இந்தியத் துருப்புகளின் தொயையும் மிக அதிகப்படுத்தப் பட்டது. 1914 - 15ம் வருஷத்தில் இந்தியா அரசாங்கத்தின் இராணுவச் செலவு 30 கோடி 80 லட்சம் ரூபாயாக இருந்தது. 1921 - 22-ம் வருஷத்தில் அது 69 கோடி 81 லட்சமாக உயர்ந்து விட்டது. ஐரோப்பிய யுத்தத்தினால் இந்தியாவுக்கு ஏற்பட்ட அதிக இராணுவச் செலவை பிரிட்டனே ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று கமிட்டியார் கருதுகின்றனர். தவிர, இந்தியர்களுடைய வரிப் பணத்திலிருந்து பிரிட்டனுக்கு நன்கொடை யளிக்க இந்தியா அரசாங்கத்தாருக்குச் சட்டப்படி அதிகா மில்லை யென்றும், ஆதலின் இந்த யுத்த நன்கொடை சட்ட விரோதமானதென்றும் கமிட்டியார் அபிப்பிராயப் படுகின்றனர்.

### சில்லரைக் கடன்கள்

லண்டனிலுள்ள இந்தியா மந்திரி காரியாலயச் செலவனைத்தும் 1900-ம் வருஷம் வரைக்கும் இந்தியாவின் வரிப் பணத்திலிருந்தே கொடுக்கப்பட்டு வந்தது. குடியேற்ற நாட்டுக்காரியாலயத்தின் செலவுக்குக் குடியேற்றநாடுகள் ஒன்றும் உதவி செய்யவில்லையானாலும், இந்தியாமந்திரிகாரியாலயத்திற்கு மட்டும் இந்தியா பணஉதவி செய்துவந்தது. ஜிப்ரால்டர், மால்டா ஆகிய துறை முகங்களைப் போல் ஏடனும் பிரிட்டனுடைய நன்மைக்குரிய ஒரு துறை முகமாகும். ஆதலின் இந்தத் துறைமுகம் கிரேட் பிரிட்டனுடைய ஆதிக்கத்திற்கு வந்தது முதல், அதாவது 1838-ம் வருஷம் முதல் தற்போதைய நாள்வரை இந்தத் துறை முகத்திற்கான செலவை கிரேட் பிரிட்டனே ஏற்றுக் கொள்ள வேண்டும். 1810-ம் வருஷத் ஸ்தாபிக்கப்பட்ட பாரசீகத் தூதவக் கூட்டத்தின் செலவை பிரிட்டன் திருப்பிக்கொடுத்துவிடவேண்டும். பிரிட்டனுடைய வியாபார நன்மையை உத்தேசித்து சைனாவில் ஏற்படுத்தப் பட்டிருக்கும் பிரதிநிதி ஸ்தாபனத்தின் செலவுகளைக் கிரேட் பிரிட்டனே ஏற்றுக் கொள்ள வேண்டும். மற்றும், கிறிஸ்தவப் பாதிரிமார் இலாகாவின் பொருட்டுச் சென்ற 35 வருஷ காலத்தில் 70 லட்சம் பவுன் செலவழிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் செலவு, இந்திய வரி செலுத்துவோருடைய தலையில் சுமத்தப் பட்டிருக்கக் கூடாதென்று கமிட்டியார் கருதுகின்றனர்.

1886-ம் வருஷ முதல் 1907-ம் வருஷம் வரை, பர்மா அரசாங்கத்தின் வரவு செலவு திட்டத்தில் மொத்தம் 15 கோடி ரூபா துண்டு விழுந்திருக்கிறது. தவிர, அந்தப் பிரதேசத்தின் பொருளாதார அபிவிருத்திக்காக 22 கோடி ரூபா செலவழிக்கப்பட்டிருக்கிறது. மற்றும், பர்மாவின் பாதுகாப்புக்காக இந்தியா செலவழித்திருக்கும் தொகையில் ஒரு பாகத்தையாவது, இந்தியா அரசாங்கத்துக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று கமிட்டியார் கருதுகின்றனர். பொதுவாக, பர்மாவின் பொருட்டு, 82 கோடி ரூபா வரவேண்டுமென்று கமிட்டியார் கருதுகின்றனர். ரிவர்ஸ் கவுன்சில் பில் விஷயத்தில் 35 கோடி ரூபா கிடைக்க வேண்டுமென்று கமிட்டியார் கருதுகின்றனர்.

இந்தியாவில் போடப்பட்டுள்ள ரெயில்வேக்களின் பொருட்டுச் செலவழிக்கப்பட்டிருக்கும் தொகையில் 83 கோடி ரூபா கிடைக்கவேண்டும். இதில், வடமேற்கு எல்லைப்புறத்திலும், ஏடனிலும் போடப்பட்டிருக்கும் ரெயில்வேக்களுக்காக 33 கோடி ரூபாயும், கம்பெனி ரெயில்வேக்களை அரசாங்கத்தார் வாங்கிக் கொண்டபோது, கம்பெனியார் அதிக விலை கூட்டிப் பெற்றுக்கொண்ட தொகை 50 கோடி ரூபா யென்றும் கணக்கிட்டு, மொத்தம் 83 கோடி ரூபா வரவேண்டுமென்று கமிட்டியார் கூறுகின்றனர்.

தவிர, பம்பாய் கடல் தூர்க்கும் திட்டம், புதிய டெல்லி நகர நிர்மாணம் ஆகிய இவைகளுக்காக வீணாப் பணம் செலவழிக்கப்பட்டிருக்கிறதென்றும் இவைகளைப்பற்றி இனிச் சிந்திப்பதில் பயனில்லை யென்றும் கமிட்டியார் கூறுகின்றனர்.

பிரிட்டிஷ் தொடர்பு ஏற்பட்ட பிறகு இந்தியா பெயரால் செலவழிக்கப்பட்ட கீழ்க்கண்ட தொகைகள் பிரிட்டனிடமிருந்து வரவேண்டும்:—

| கம்பெனியின் கீழ்:— | கோடி ரூபா |
|---|---|
| வெளி நாட்டு யுத்தங்கள் | 35 |
| மூலதனமும் வட்டியும் | 37 |
| இந்திய சிப்பாய்க் கலகச் செலவு | 40 |
| பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ்:— | |
| வெளி நாட்டு யுத்தங்கள் | 37 |
| ஐரோப்பிய யுத்தம்-நன்கொடை | 189 |
| செலவு | 171 |
| சில்லரைச் செலவு | 20 |
| பர்மாவின் பொருட்டு செலவு | 82 |
| ரிவர்ஸ் கவுன்சில் நஷ்டம் | 35 |
| ரெயில்வேக்கள் | 83 |
| மொத்தம் | 729 கோடிரூபா |

இந்தியாவின் மொத்த பொதுக் கடன் 1100 கோடி ரூபாயா யிருக்கிறது. ஐர்லாந்து சுதந்திர நாடாகப் பெற்றபோது, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கடன் பாக்கியில், ஐர்லாந்து செலுத்தவேண்டிய பாக்கித் தொகை ரத்து செய்யப்பட்டு விட்டது. அது போலவே, இந்தியாவின் பொதுக் கடனையும் ரத்து செய்து விடவேண்டும் என்று கமிட்டியார் கருதுகின்றனர்.

கமிட்டியின் அறிக்கையுடன், ஸ்ரீமான் ஜே. சி, குமரப்பா இரண்டு தனிக் குறிப்புகள் சேர்த்திருக்கிறார்.அதில்ஒன்றில்,இந்தியாவின் தேவைக்கு அதிகமான பாதுகாப்பு முஸ்தீப்புகளை வைத்துக்கொண்டு அதனால் இராணுவச் செலவு அதிகமாகிறதென்று கூறப்படுகிறதென்றும், இது சம்பந்தமாக 540 கோடி ரூபா இந்தியாவுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டுமென்றும், வட்டியின் பொருட்டு ஏராளமான தொகை செலவழிக்கப்பட்டிருக்கிற தென்றும் இந்த அம்சமாக 536 கோடி ரூபா வரவேண்டு மென்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

எங்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தில் இடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1931ஞூ ஜூலைமீ 22உ

## சுயராஜ்யத்தின் அவசியம்

சுயராஜ்யத்தின் அவசியத்தை நீண்ட காலமாக இந்தியரிற் பெரும்பான்மை யோர் உணராதிருந்தனர். அவர்கள் "இராவணன் ஆண்டாலென்ன இராமன் ஆண்டாலென்ன" என்றும், "வடகோடுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்பிறைக்கே" என்றுஞ் சொல்லிக் கொண்டிருப்பார்கள். இப்பொழுது அப்பெரும்பான்மையோர் சுயராஜ்யத்தின் அவசியத்தை உணர்ந்து வருகிறார்; அதற்குரிய துறைகளிலும் இறங்கி உழைக்கத் தொடங்கியிருக்கிறார்.

"இந்தியாவிற்குச் சுயராஜ்யம் வேண்டாம்" என்று சொல்வோரும் நாட்டில் இல்லாமலில்லை. ஆனால் அவர்கள் தொகை நாளுக்கு நாள் சுருங்கியே வருகிறது. இந்தியாவிற்குச் சுயராஜ்யம் தற்போது வேண்டாம் என்று அறுதியிட்டுக் கூறுவோர் பெரிதும் வகுப்பு வாதிகளாகவே இருக்கிறார். அவர்களும் நாளடைவில் திருந்திவிடுவார்கள்.

சுயராஜ்யத்தின் அவசியத்துக்குரிய காரணங்கள் பல உண்டு. அவைகளுள் சிறந்தது பொருளாதாரமாகும். பொருளாதாரம் நாட்டுக்கு உயிர்போன்றது. அது சிர்குலைந்தால் நாடு எவ்வழியிலுஞ் செழுமை யுறுதென்பது வெள்ளிடைமலை. "பொருளிலார்க்கு இவ்வுலக மில்லை" என்றார் திருவள்ளுவனார். பொருள், வாழ்விற்கு இன்றியமையாதது. அத்தகைப் பொருளாதாரத்தில் இந்தியா எந்நிலையிலிருக்கிறது என்பதைச் சுயராஜ்யம் வேண்டாம் என்பார் உணர உணர அவர்களும் சுயராஜ்யம் வேண்டும் என்று சொல்லுவோராய் மாறி விடுவார்கள்.

இந்தியாவின் செல்வம் பல வழியிலும் பிற நாடுகளுக்குச் சென்றுகொண்டிருக்கிறது. அவ்வழிகள் பல அறிஞர்களால் விளக்கப்பட்டிருக்கின்றன. உடை முதலிய வாழ்வுப் பொருள்களின் பொருட்டு இந்தியச் செல்வம் கோடி கோடியாகப் பிறநாடுகளுக்குச் சென்று கொண்டிருக்கிறது. துணிக்கு மட்டும் ஆண்டுதோறும் அறுபது கோடி ரூபா பிறநாடுகளுக்குச் செல்வதை அறிஞர்கள் எடுத்துக்காட்டிக் கதரின் அவசியத்தை அறிவுறுத்தி வருகிறார்கள். துணி மட்டுமா பிறதேசங்களிலிருந்து வருகிறது? வாழ்வுக்குரிய பல பொருள்கள் பிறதேசங்களிலிருந்துவருகின்றன. அவைகளைத் தடுக்கும் பொறுப்பு இன்னும் இந்தியாவிற்கேற்படவில்லை. பல வழியிலும் பலகோடி ரூபா நாட்டைவிடுத்துச் செல்வது ஒருபால் கிடக்க.

இந்தியா சுயராஜ்யம் இழந்த நாள் தொட்டு, கிழக்கிந்தியக் கூட்டத்தார் காலத்திலும், பிரிட்டிஷ்கோமுக ஆட்சியிலும் இந்தியாமீது சுமத்தப்பெற்ற கடன்பெருக்கை யுணரும் எவ்விந்தியருக்குச்சுயராஜ்யவேட்கை தோன்றாது? இந்தியாமீது சுமத்தப்பெற்ற கடன்களை ஆராய்ந்து அறிக்கையாகக் காங்கரஸ் வெளியிட்டது (காங்கரஸ் செய்துள்ள அரிய சேவைகளில்) சிறந்த ஒன்றாகும். இதற்குக் கயாகாங்கரஸ் கால் கொண்டது. இடையில் உறக்கம் உண்டாயிற்று. மீண்டுங் கராச்சி காங்கரஸ் வலியுறுத்தலின்மேல் அமைக்கப்பெற்ற ஆராய்ச்சிக் கூட்டம் தனது கடனையாற்றி அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அவ்வறிக்கை சென்ற வாரம் நமது பத்திரிகை அச்சேறுந் தறுவாயில் கிடைத்தமையால், சிறு குறிப்பு மட்டும் எழுதலானோம். இவ்வாரம் அவ்வறிக்கையின் சுருக்கம் மற்றோரிடத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. அவ்வறிக்கையைப் பன்முறை ஊன்றிப்படிக்குமாறு நேயர்களைக் கேட்டுக்கொள்கிறோம்.

எவ்வெவ் வழியில் இந்தியாவின்மீது அநியாயமாகக் கடன்கள் சுமத்தப்பட்டிருக்கின்றன என்பது அவ்வறிக்கையால் நன்கு புலனாகும். இந்தியாவிற்குத் தொடர்பில்லாத போர்கட்கெல்லாம் நேர்ந்த செலவுகள் இந்தியாவின் தலைமீது சுமத்தப்பட்டதை அறிக்கை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கி யிருக்கிறது. அறிக்கை குறிப்பிட்டுள்ளவாறு கடன்தொகையை பிரிட்டிஷ் அரசாங்கம் செலுத்த ஒருப்படுமா என்பது ஐயம். வட்டமேஜைமகாநாட்டில் அதைப்பற்றிய விவாதம் எழாமற்போகாது.

1100 கோடி ரூபா கடன் ஏற்பட்டதற்கு அடிப்படையான காரணத்தை நோக்கித் தக்கமுறையில் கழுவாய் தேடுதற்குரிய வேட்கையை அறிக்கை எழுப்பா நிற்கிறது. அவ்வறிக்கை இந்தியாவுக்குமட்டு மன்று - உலகிற்கே சிறந்த பிரசாரஞ் செய்திருக்கிறது. அவ்வறிக்கை பிரிட்டிஷார் கண்ணையுந் திறக்கச் செய்யும்.

இந்தியா சுயராஜ்ய நாடாயிருந்தால் இப்பெருந்தொகை வீணுக்குச்செலவாயிருக்குமா என்பதை வகுப்புவாதிகள் கவனிப்பார்களாக. இந்தியாவின் பொருள் போக்கில் வகுப்புவாத மில்லையென்பதையும் சகோதரர்கள் கவனிப்பார்களாக. ஹிந்துக்கள் முஸ்லிம்கள் மற்ற மற்றவர்கள் எல்லாருஞ் சேர்ந்த இந்தியர் பணமே பாழுக்குச் சென்றிருக்கிறது. இந்தியாவின் பொருளாதாரம் வற்ற வற்ற இந்தியர் அனைவருக்குமே கேடு நிகழும். இந்தியப் பொருளாதார நிலையைச் செம்மை செய்ய இந்தியரனைவர்க்குமே பொறுப்புண்டு என்று சொல்லவும் வேண்டுமோ? இதில் வகுப்புவாதங்களை ஏன் கொணர்ந்து நுழைத்தல் வேண்டும்?

காங்கரஸ் சார்பாக வெளிவந்த இந்தியக் கடன் அறிக்கை சுயராஜ்யத்தின் அவசியத்தை நன்கு தெரிவிக்கிறது. பொருளாதாரச் செழுமைக்குச் சுயராஜ்யம் அவசியம்; அவசியம்.

## வகுப்பு வாதம்

இந்தியா இந்தியருடையது. அது ஹிந்துக்களுக்கு மட்டுமோ, முஸ்லிம்களுக்கு மட்டுமோ, அல்லது மற்ற மற்றவர்கட்கு மட்டுமோ உரியதன்று. இந்தியாவின் உரிமைக்கு இந்திய மக்கள் எல்லாரும் முயலுதல் வேண்டும். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், மற்ற மற்றவர்களெல்லோரும் தங்களை இந்தியரென்று கருதியே உரிமைப் போரில் தலைப்படுதல் வேண்டும். உரிமைப்போரில் வகுப்பு வேற்றுமையைப் புகுத்திப் பிளவை உண்டுபண்ணுவது தேச விடுதலையை உண்மையில் நாடுவதாகாது.

இந்தியாவில் ஆயிரக்கணக்கான வகுப்புகளிருக்கின்றன. ஜன கணிதத்திற்கு அகப்படாத வகுப்புகளும் இந்தியாவிலுண்டு. இத்துணைவகுப்புகளும் தனித்தனிப் பிரதிநிதித்துவத்துக்குப் போரிட்டால், நாட்டின் நிலை என்னாகும்?

வகுப்புணர்வு தோன்றும்போது, நாட்டுணர்வுக்கு இடம் ஏது? இது குறித்துப் பன்முறை எழுதியிருக்கிறோம். காலத்தின் கோலமும், தேசத்தின் நிலையும், தலைவர்களின் போக்கும் வகுப்பு வாதத்தைப்பற்றி அடிக்கடி எழுதுமாறு தூண்டுகின்றன.

இந்தியாவுக்கு விடுதலை வேண்டுமென்றே வகுப்பு வாதிகளிற் பெரும்பான்மையோர் கருதுகிறார். விடுதலையும் வேண்டும் வகுப்புரிமையும் வேண்டும் என்பது அன்னார் கருத்துப் போலும்! இரண்டுக்கும் ஆசைப்படுவது பொருளற்ற ஒன்றாகும். வகுப்புப்பிரதிநிதித்துவத்தைக் கொண்ட ஆட்சி சுத்த சுய ஆட்சியாகாது. சுத்த சுயஆட்சி இல்லாதஇடத்தில் பொருளாதாரநிலைசெழுமையுறாது. வாழ்விற்குப் பொருளாதாரம் இன்றியமையாதது. அதைச் செழிய நிலையில் வைத்திருக்கவல்லது சுத்த சுயஆட்சி யொன்றே யாகும்.

இப்பொழுது இந்தியாவின் வறுமை போக்கவே சுய ஆட்சி கேட்கப்படுகிறது. அதில் வகுப்பு வாதங் குறுக்கிட வேண்டுவதில்லை. வறுமை என்பது எல்லாரையுந் தாக்குவதா அல்லது குறிப்பிட்ட வகுப்பாரை மட்டுந் தாக்குவதா என்பதை வகுப்பு வாதிகள் சிந்திப்பார்களாக. வறுமையால் ஹிந்துக்கள் முஸ்லிம்கள் கிறிஸ்துவர்கள் முதலிய எல்லாரும் பிடிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்பிடிப்பு அறுபட்டால்இன்பமும் எல்லாருக்கும் வருதல் இயல்பு. ஆகவே இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் வகுப்பு வாதத்தை நுழைப்பது அறிவுடைமையாகாது.

இந்தியாவில் பேசப்படும் வகுப்பு வாதம் பெரிதும் மதத்தையும், சாதியையும் ஒட்டியதென்பது வெள்ளிடைமலை.

இந்தியாவின் வறுமை போக்கக் கேட்கப்படுஞ் சுயஆட்சியில் மதப்பித்தும் சாதிப் பிணக்கும் நுழையவேண்டுவதில்லை. எவரெவர் எவ்வெச் சமயத்திலிருக்க விரும்புகிறாரோ அவரவர் அவ்வச் சமயத்திலிருந்து வழிபாடு நிகழ்த்தி வரலாம். அதில் அரசாட்சி நுழையப் போவதில்லை. ஆகவே சமயத்தை பொட்டி வகுப்புவாதம் எழுதற்கு இடனில்லை யென்க.

ஹிந்து முஸ்லிம் பிணக்கு பெரிதும் சமயத்தை யொட்டியதாகும். சுய ஆட்சி சமயத்தை யொட்டியோ வெட்டியோ காரியங்கள் நிகழ்த்தப்போவதில்லை. சமய காரியங்களில் அரசாங்கம் தலையிடப்போவதில்லை. ஆகவே சமயத்தை யொட்டி வகுப்புவாதத்தைக் கிளப்புவது வீணேயாகும்.

சாதிகளையொட்டி மன்பதைக்கு அவமானம் விளைத்துவரும் வழக்கொழுக்கங்களைப்போக்க சுயஅரசுமுயன்றேதீரும். தீண்டாமையை எடுத்துக் கொள்வோம். இது மக்களுக்குள்ள சமரச தர்மத்தைக் கெடுப்பதா யிருக்கிறது. அதைத் தொலைக்கச் சுயஆட்சி யரசுபாடுபடாமற் போகாது. சாதி யென்னும் பெயரால் நிகழ்த்தப் பெறுங்கொடுமைகளைக் களைய வேண்டுவது சுய ஆட்சியின் கடமை. அதற்குரிய சட்டங்கள் சுய ஆட்சிக் காலத்தில் உருக்கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

வட்டமேஜை மகாநாடு கூடப்போகிறது. அம்மகாநாட்டில் வகுப்பு வாதந் தலை காட்டாதிருக்குமாறு இந்தியப் பிரதிநிதிகள் நடந்து கொள்வதே சிறப்பு. வட்டமேஜை மகாநாட்டில் ஹிந்து முஸ்லீம் வேற்றுமை தலைவிரித்தாடத்தக்க செயல்கள் இப்பொழுது நாட்டில் நடைபெற்று வருகின்றன. பம்பாயில் கூடிய காங்கரஸ் காரியக்கூட்டம் எவ்வளவோ முயன்றும் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைஉண்டாகவில்லை.

எக்காரணம் பற்றியுங் காங்கரஸ் வகுப்பு வாதத்துக்கு இடந் தருதல் தவறு. சுயஆட்சிவரினும் வருக; வாராதொழியினும் ஒழிக. இந்தியாவில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் வகுப்பு வாதிகளாயினுமாக. காங்கரஸ் வகுப்பு வாதத்தை ஏற்றல் கூடவே கூடாது. வகுப்புவாதம் அரசியல் நோய் போன்றது. அதனால் அந்நிய ஆட்சிக்குள்ள ஆக்கத்தையும், நாட்டின்பொருளாதாரம் வளம்படுதற்கு ஏதுவில்லா திருத்தலையும் தேசத்தாருக்கு நன்கு விளக்கிக் காட்டுந் தொண்டில் காங்கரஸ் சிறப்பாக ஈடுபடுதல் வேண்டும்.

பம்பாயில் கூடிய காங்கரஸ் காரியக் கூட்டத்தைப் பற்றியும், அதைக் குறித்துக் காந்தியடிகள் எழுதியதைப் பற்றியும் மௌலானா ஷாக்கத்அலி வெளியிட்ட கருத்தைக் கண்டு ஆறுத் துயருறுகிறோம். மௌலானா ஷாக்கத் அலியுடன் டாக்டர் அன்ஸாரி முதலியோர் மீண்டுங் கலந்து பேசி நன்முடிவைக் காண முயல்வாராக. ஹிந்து முஸ்லிம் மனக் கலப்பின்றி நிலைத்த சுயராஜ்யம் பெறுதல் அரிது அரிது என்பதைத் தேச பக்தர்கள் உணர்ந்து நடப்பார்களாக. அவ்வொற்றுமையை வளர்க்குந் துறையில் நின்று பத்திரிகையுலகஞ் சேவை செய்வதாக.

## இடியேறு

### விநோத யோசனை

பீஹார் ஒரிஸா மாகாணத்துக்கலால் இலாகா மந்திரி, தமது இலாகாவில் வருமானம் குறைந்து போவதைத் தடுக்க ஒருபுதிய யோசனையைக் கிளப்பியிருக்கிறார். கலால் இலாகாவிலுள்ளஉத்தியோகஸ்தரிற் பெரும்பான்மையோர் மது அருந்தாதவராகவே இருக்கின்றன ரென்றும், இவர்களுக்குக் காங்கிரஸ்காரர்களால் செய்யப்படும் மதுவிலக்குப் பிரசாரத்தில் ஒருவித அநுதாபம் இயற்கையாகவே இருக்கின்றதென்றும், ஆதலின் குடிக்கும் பழக்கத்தையுடையவர்களை மேற்படி உத்தியோகங்களுக்கு நியமித்தால், அவர்கள், கலால் இலாகாவுக்கு நன்மை உண்டாகும்படியான வழியில் உழைப்பார்களென்றும் அவர் சொல்கிறார். இந்த யோசனையை, அரசாங்கத்தாரும் தீவிரமாக ஆலோசித்தனராம்! நிருவாகத் திறமையை உத்தேசித்து, இதனை ஒருவிதியாகச் செய்யமுடியாதென்று அவர் கூறிவிட்டனர். ஆனால் அதிகாரிகள் இந்தக் கொள்கையை மனதில் வைத்துக் கொண்டு, நியமனங்கள் செய்யலாமென்று மந்திரி மீண்டும் யோசனை சொல்லியிருக்கிறார்! மதுபானஞ் செய்வோர், இவருக்கு ஒரு கோயில் கட்டி வைப்பாரா?

### "நடராஜ தரிசனம்"

திருவாளர் - சுரேந்திரநாத் ஆரியா இயற்றிய "நடராஜ தரிசனம்" என்னும் நூல் எனது பார்வைக்கு வந்தது. அதனை ஒரு முறை உற்று நோக்கினேன்.

நாட்டுக் கல்வியும் வழி வழிப் பயிற்சியும் அருகி, இருள் சூழ்ந்து, மருள் மூடியுள்ள இந்நாளில், நடராஜ தத்துவம் பல்லோர்க்கு விளங்குதல் அரிதே. இந்நாளில் அத்தத்துவமுணர்ந்த அறிஞர்கள் அதை எளியநடையில் மற்றவர்க்கு அறிவுறுத்த முயலல் வேண்டும். அம்முயற்சியில் திருவாளர் ஆரியா தலைப்பட்டமை குறித்துக் கழிபேருவகை எய்துகிறேன்.

திருவாளர் ஆரியா தாமுணர்ந்த நடராஜ தத்துவத்தைச் சுருங்கிய முறையில் எளிய நடையில் எழுதி நாட்டுக்கு நல்கி யிருக்கிறார். இந்நூல் வாயிலாக அவர் நாட்டுக்கு நல்லதொரு தொண்டு செய்தவராகிறார். அவருக்கு எனது மனமார்ந்த வாழ்த்து உரியதாக.

இந்நூற்கண், நடராஜர் உருவத்தை அங்ஙனே கோடல் அறிவுடைமையன்றென்பதும், அதன் உள்ளுறையை உணர்ந்தின்புறுவதே அறிவுடைமை யென்பதும், நடராஜன் பெயரால் நிகழ்ந்துவரூஉம் மூட வழக்க ஒழுக்கங்கட்கும் நடராஜ தத்துவத்துக்கும் தொடர்பில்லை யென்பதும், சமயமென்பது கோயில்களும் மடங்களும் அன்றென்பதும், இன்ன பிறவும் விளக்கப்பட்டிருக்கின்றன; சமரச சன்மார்க்க மணம் ஆங்காங்கே கமழ்தலும், சாதிப் புன்மையும், சமய வெறிச் சிறுமையும் இடையிடை மறுக்கப்பட்டிருத்தலும் மகிழ்ச்சி யூட்டுகின்றன.

தத்துவ உணர்வில்லா உருவ வழிபாடுகள் பெருகியுள்ள இந்நாளில், இந்நூலால் பெருநலன் விளையுமென்பதில் ஐயமில்லை. இந்நூலைத் தமிழர்கள் ஆதரிப்பார்களாக.

இதுபோன்ற பன்னூல்கள் திருவாளர் ஆரியா வாயிலாக வெளிவருதல் வேண்டுமென்பது எனது வேட்கை. அதற்குரிய வாய்ப்பும், நீண்டநாளும், நோயற்ற யாக்கையும் திருவாளர் ஆரியாவுக்கு அருளுமாறு தில்லைக் கூத்தனை வேண்டுகிறேன்.

திரு. வி. கலியாணசுந்தரன்.



## ஹிந்துமத நுட்பம்

### காசிம் பஜார் மகாராஜாவின் சொற்பொழிவு

பர்த்வானில் கூடிய ஆறுவது வங்காள மாகாண ஹிந்து மகாநாட்டில் தலைமைவகித்த காசிம்பஜார் மகாராஜா நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம் வருமாறு:—

ஹிந்து தர்மத்தின் மூலத்தை ஆராய்ந்து பார்த்தால், மானிடனுக்கும் உயிர்த்திரளுக்கும் ஒருவித ஒற்றுமை இருப்பதை முக்கியமாகப் பார்க்கலாம். ஹிந்து நாகரிக சரித்திரத்தில் இவ்விரண்டுக்கும் எவ்வித் முரண்பாடும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. உயிர்த்திரளனைத்திலும் மெய்ஞ்ஞானத்தையும் பேரின்பத்தையும் காண்பதற்கு உறுகருவியாயிருப்பது, மானிடனின் பூரணத்துவமே யாகும். மானிடன் என்ற சொல்லுக்குத் தனி மனிதன் என்று மாத்திரம் பொருளன்று. அஃது உயிர்வர்க்க மனைத்தையுமே குறிக்கிறது. மானிடனுடைய சிந்தனை உலகத்தில், தனி மனிதன் மாத்திரமல்ல, உயிர்த்திரளனைத்தும் வாசஞ் செய்கிறது. கல்லிலே சுழுப்தி அவஸ்தையிலும், மிருகத்திலே சொப்பனவஸ்தையிலும், மனிதனிலே ஜாக்கிரதா வஸ்தையிலும் ஆன்மா நிலவுகிறதென்பது ஹிந்துவின் கொள்கை. "தத்வமஸி" என்பது ஹிந்து தர்மத்தின் மூலவேர். ஆண்டவன் ஒன்றாகவும் பலவாகவும் இருக்கிறார்; இறுதியாகச் சென்று அடைய வேண்டிய நித்தியப் பொருள் அவரே; செகத்துக்கெல்லாம் ஆதாரமாய், எங்கும் நிறைந்து பிரகாசிப்பதாய், ஒன்றாய், எல்லாமுமாய் இருப்பவர் அவரே. எப்பொழுதும், எல்லாநாடுகளிலும் வியாபித்திருக்கும் விராட் புருஷன் அவரே. மன்பதையின் நலத்திலேயே ஹிந்து தர்மத்தின வேரூன்றியிருக்கிறது. ஹிந்துமதம் சமரஸ மதம். ஆதலின் அதன் முன்னேற்றமானது, மனித சமூகத்திற்கு நன்மை பயப்பதாகும்.

ஆனால், தற்கால நாகரிக மோகத்திற்கு வசப்பட்டுள்ள ஹிந்துஇளைஞர்கள் "எல்லாம் சரிதான்; ஆனால், இந்த நம்பிக்கையானது, இப்பொழுது உலகத்தில் தாண்டவம்செய்து கொண்டிருக்கும் புதிய நாகரிகத்திற்கு எவ்வித உதவியும் செய்யமுடியாமல் எங்களைச் செய்திருக்கிறதே" என்றுகேட்கலாம். ஹிந்து தர்மத்தைப்பற்றி இவ்வனம் தவறுகப் பொருள்கூறவேற்பட்டிருப்பதுதான்பெரிதும் விசனிக்கத் தக்கது. ஹிந்து மதமாதல் ஹிந்து தத்துவங்களாதல், உலக வாழ்க்கையின் இன்றியமையாத் தன்மையை எப்பொழுதும் புறக்கணித்ததே கிடையாது.

#### இடைச்செருகல்

குறுகிய நோக்கத்திற்கு ஹிந்து தர்மத்தில் இடமேயில்லை. இப்பொழுதுள்ள கொடிய பழக்கங்கள், பொருளற்ற ஆசாரங்கள் முதலியன ஹிந்து தர்மத்தினால் விதிக்கப்பட்டவையல்ல. இவைகள் யாவும் காலத்துக்குத் தக்கபடி ஏற்பட்ட கோலங்கள். எந்த விசேஷ காரணங்களுக்காக, இந்தப் பழக்கங்களும் ஆசாரங்களும் ஏற்பட்டனவோ அவைகள் இப்பொழுது இல்லை, ஆயினும் பயனற்ற போலி மதக் கொள்கைகளை இன்னும் வைத்துக்கொண்டிருக்கிறோம். இவைகள் நெற்பயிரில் நாணற் புற்கள் முளைத்தது போலவே யாகும். இப்பொழுது நாம் செய்ய வேண்டுவது, இந்த உயரிய ஹிந்து மதத்தை அழிப்பதல்ல; ஆனால் வீரத்துடன், உற்சாகத்துடன் இந்த நாணற் புற்களைக் களைந்தெறிய வேண்டுவதே யாகும்.

#### தீண்டாமை

ஹிந்து மதத்தில் தீண்டாமை யென்னும் களங்கம் இருக்கிறது என்று சிலர் கூறுகின்றனர். ஹிந்து சமூகத்தின் கட்டுப்பாட்டுக்கு இது முற்றிலும் முரணானதாகும். மகாபாரதத்திலே சபாபர்வம் 48-வது அத்தியாயத்திலிருந்து ஓர் உதாரணம் எடுத்துக் கூறுகிறேன். இராஜசூய யாகம் முடிவுபெற்றதும், வந்திருந்த பிராமணர்களுக்குப் போஜனம் அளிக்கப்பட்டது. அப்பொழுது, சீன, பாரசீக சாக, ஹூண தேசங்களிலிருந்து வந்திருந்த சூத்திரியர்களே பரிமாறினார்கள். அவரவர்களுடைய தொழிலைப்பற்றி வருணாசிரமம் ஏற்பட்டதேதவிர, பிறப்பை யொட்டியன்று. சமூகக்கட்டுப்பாடு ஒழுங்காக நிலைத்து நிற்க வேண்டுமானால் தொழிலைப்பற்றிய இந்தவருணாசிரமப் பாகுபாடுகள் இன்றியமையாதனவாகும். ஒரு சாதியார், மற்றொரு சாதியாரை விடத் தாழ்ந்தவர் என்று சாஸ்திரங்கள் கூறவில்லை. ஒரு தேகத்திற்கு எல்லா அவயவங்களும் தேவையாயிருப்பதுபோல், ஹிந்து சமூகத்திற்கு இந்தப் பாகுபாடுகளும் வேண்டற்பாலனவாம். பரஸ்பர நம்பிக்கை, மரியாதை இவைகளின்மீது ஹிந்து சமூகம் ஒழுங்காகக் கட்டப்பட்டிருக்கிறது. இதே மாதிரி உலகத்திலுள்ள வேறெந்தச்சமூகமாவது நிலவுகிறதா அல்லது நிலவச்செய்ய முடியுமாவென்று கேட்கிறேன்.

#### பெண்மணிகள் முன்னேற்றம்

தற்கால ஹிந்து சமூகத்திற்குப் பெண்மக்களின் முன்னேற்றம் இன்றியமையாததாகும். எங்கே பெண் இருக்கிறாளோ, அங்கே தெய்வம் இருக்கிறது என்பது ஹிந்துக்களின் நம்பிக்கை. ஹிந்து சமூகத்திலே, புருஷன் ஸ்திரீயை கௌரவத்துடன் நடத்திவந்திருக்கிறான்; தேவதை யென்று போற்றி யிருக்கிறான்; இல்லரசி என்று பாராட்டி யிருக்கிறான்; தன்னுடைய ஸஹதர்ம சாரிணியாக நடத்தி வந்திருக்கிறான். ஆனால் இப்பொழுது ஹிந்துப் பெண்மக்கள் எந்நிலையில் இருக்கிறார்கள்? அறியாமையும், மூடநம்பிக்கையும் அவர்களை அடிமைக்குழியிற்றள்ளி ஆழ்த்தி யிருக்கின்றன. அவை மாத்திரமா? ஆண்களுக்கும் பெண்களுக்கும் தேகக் கூறுபாட்டிலும், குணத்திலும் வேறுபாடு இருக்கிறதென்பதை மறுக்க முடியாது. இந்த வேற்றுமைகளைக் கவனியாமல், ஆண் மக்களோடு பெண்மக்களும் போட்டி போடத் தொடங்குவார்களானால், தற்கால நாகரிகம் என்னும் பெயரால் பல தவறான துறைகளில் இறங்க முற்படுவார்களானால், ஹிந்து சமூகத்தின் வாழ்நாளை விரலால் கணக்கிட்டுவிடலாம்.

தங்களுடைய வளர்ச்சிக்கு இன்றியமையாத உரிமைகளைப் பெற்றுக்கொள்ள அவர்கள் வேலை செய்யட்டும். பெற்றோர்களுடைய, உறவினர்களுடைய தலையீடின்றி தங்கள் விருப்பப்படி விவாகம்செய்துகொள்வதில் நன்மையும்இருக்கிறது; தீமையும்இருக்கிறது. இத்தகைய கலியாணமும் செய்துகொள்ளட்டும். ஆனால் ஒன்றை மட்டும் அவர்கள் நினைவிலிருத்திக் கொள்ளவேண்டும். ஒவ்வொன்றிலும் நன்மையும் உண்டு; தீமையும் உண்டு. பிறர் செய்கின்றனரே என்பதற்காக மட்டும் நாம் நடித்துக்கொண்டு போனால் அதனால் அழிவே உண்டாகும். ஒரு மாறுதல் வேண்டுமென்று சொல்லி—இந்த மாறுதல் உண்மையானமாறுதல் அல்ல—நமது பெண்மணிகள் ஏமாற்ற மடையாதிருப்பார்களாக.

#### மத மாற்றம்

பிற மதத்திலிருந்து நம் மதத்திற் சேர விரும்புவோரைச் சேர்த்துக் கொள்வதும், நம் மதத்திலிருந்து பிரிந்து வேற்றொரு மதத்திற்குட் புகுந்தவர் மீண்டும் நம் மதத்திற்கு வர இச்சைப் பட்டால் அவரைச் சேர்த்துக் கொள்வதும் ஹிந்து மதத்தினால் அங்கீகரிக்கப்பட்டவைகளே யாகும். தாண்டிய ப்ராஹ்மணத்தில் கூறப்பட்டுள்ள ப்ருத்யஷ்டோம யாகத்தைக் கவனித்தால்ஒருவகுப்பினர்முழுவதும்ஹிந்து சமூகத்தில் சேர்த்துக்கொள்ளப் பட்டனர் என்று தெரிகிறது. வசியப்படுத்தி அழைத்துச் செல்லப்பட்ட, அல்லது பலாத்காரத்தினால் எடுத்துச் செல்லப்பட்ட ஸ்திரீகளையும், பணஆசையால் மற்றொரு மதத்தில் சேர்ந்த ஸ்திரீ புருஷர்களையும் மீண்டும் ஹிந்து மதத்தில் கொண்டு சேர்ப்பது ஹிந்து மதத்தினரின் கடமை யென்று தேவால ஸ்மிருதி கூறுகிறது. சைதன்யரால் போதிக்கப்பட்ட சர்வ சகோதரத்துவத்தையும் அன்பையும் நாம் கைக்கொள்ள வேண்டும். இப்பொழுது ஜகந்நாதம் என்னும் க்ஷேத்திரத்தில், எல்லாரும் ஒரே தட்டில் உண்பதைக் காண்கிறோம். ஹிந்து தர்மமானது மிகப்பரந்தது. ஆதலின் உண்மையான ஹிந்துக்கள் சமூக முன்னேற்ற வேலையை மேற்கொள்ள வேண்டும். ஹிந்து மகா சபையார், இந்த வேலையையே இப்பொழுது மேற்கொள்ள வேண்டும். துண்டுப் பிரசுரங்கள் வழங்கல், எளிய முறையில் சொற்பொழிவு நிகழ்த்தல் ஆகிய இவைகளின்மூலமாக, கிராமங்களிலும் நகரங்களிலும் இந்தப் பிரசாரத்தைச் செய்யவேண்டும். நம்முடைய மதத்தின் விரிவான தன்மையை நமது ஜனங்கள் உணர்ந்து கொள்வார்களானால், உடனே தங்கள் பெருமையை உணர்வதுமன்றி, அதன் மூலமாகப் பிறருடைய பெருமையையும் உணர்வார்கள். ஆனால், இந்தப் பிரசார வேலையை, மற்ற மதங்களின்மீது பகைமையோ, பொறாமையோ கொண்டு செய்யக்கூடாது.

#### தேர்தல் பிரச்னை

ஹிந்து - முஸ்லிம் பிரச்னையினால் தேர்தல் விஷயம் மிகவும் சிக்கலானதாக இருக்கிறது. தேசிய முஸ்லிம்களைத் தவிர, மற்ற முஸ்லிம்கள், தனித்தொகுதிகள் வேண்டுமென்று கேட்கிறார்கள். இஃது, இந்திய தேசியவாதத்திற்கு முரண்பட்டது. தவிர, முஸ்லிம் இந்தியா என்ற ஓர் எண்ணமும் உண்டாகிவிடும். இந்தியா, ஹிந்துக்களுக்கு மட்டும் சொந்த மன்று; முஸ்லீம்களுக்கும் சொந்தமன்று; அஃது இந்தியர்களுக்குச் சொந்தமானது. இந்த உயர்ந்த நோக்கத்தை நாம் உணர்ந்து நடந்தால் தான், வகுப்புப் பிரச்னைகளைப் பற்றிய பேச்சு நின்றுவிடும். வகுப்பு வேற்றுமைகளையெல்லாம் ஒழித்து இந்தியர்கள் ஒரு சமூகமாக எழுந்து சுயஆட்சி பெற்றால் அப்பொழுதே நமது தேசிய இலட்சியங்கள் நிறைவேறும். இந்தியாவின் வருங்கால அரசியல் திட்டம் தேசிய வாதத்தை அடிப்படையாகக் கொண்டே அமைக்கப்படவேண்டும். ஆயிரக்கணக்கான வேற்றுமைகளையுடைய ஒரு தேசம் சுயராஜ்யம்பெறத் தகுதியுடையதன்று. ஹிந்துக்களோ, முஸல்மான்களோ தனிப்பட்டவர்களா யிருந்து, சுயராஜ்யம் வேண்டுமென்று கிளர்ச்சி செய்வார்களேயானால், அதனால் உலகத்தாருக்கு நகைப்பே உண்டாகும். ஆதலின் இந்தியாவின் எதிர்கால அரசியல் வாழ்வானது, இவ்விரு சமூகத்தாரின் ஒற்றுமையிலேயே தங்கி நிற்கிறது.

தேசியவாதத்திற்கு முரண்பட்டது வகுப்புவாதம் என்பதை எவரும் மறுக்கமுடியாது. அதுபோல் இந்தியாவின் அரசியல் இயக்கத்தில் ஹிந்துக்கள் அதிக பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் எவரும் மறுக்க முடியாது. இந்த தேசிய வாதப் போரில் எனது முஸ்லீம் சகோதரர்களும் போட்டிபோட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். சென்றது செல்க. இனியேனும் நமது முஸ்லீம் சகோதரர்கள் முன்வந்து ஹிந்துக்களுடன் கைகலந்து, தாய் நாட்டின் முன்னேற்றத்திற்காக வேலை செய்வார்களாக. நமதுமதம், கலைஞானம், சமூக வழக்கங்கள் இவைகளில் நாம் பரஸ்பரம் மதிப்பும் பெருமையும் கொள்வோமாக. இதன் பயனாக, வருங்காலத்தவர்க்கு ஒரு ஞாபகச் சின்னமாக ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை என்ற மாளிகையை நிலைநிறுத்துவோமாக.

## தொழிலாளர் துயரம்

### பெங்களூர்

பெங்களூரிலுள்ள பின்னி மில்லில் வேலை செய்யுந் தொழிலாளர்களுக்கு, வருஷந்தோறும் போனஸ் கொடுக்கப்படுவது வழக்கம். ஆனால் இவ்வருஷம் வியாபார மந்தத்தினால், போனஸ் கொடுக்கமுடியாதென்று முதலாளிகள் கூறிவிட்டார்கள். இதனால் அதிருப்தியடைந்த தொழிலாளர்கள், 18-7-31 காலை, வழக்கம்போல் தொழிற்சாலைக்குள் சென்றார்கள். சென்ற பிறகு, வேலை செய்ய மறுத்து, அவரவர்களுடைய இடத்திலேயே இருந்து சத்தியாக்கிரகம் செய்தார்கள் என்று சொல்லப்படுகிறது. பகல் சாப்பாட்டிற்குக் கூட இவர்கள் போகவில்லை. பிற்பகல் மூன்றரை மணிக்குத் தொழிற்சாலையை விட்டு வெளிச் சென்றுவிடும்படி தொழிலாளர்கள் கூறப்பட்டார்கள். போனஸ் கொடுத்தாலன்றிப் போகமுடியாதென்று தொழிலாளர்கள் கூறினார்கள். உடனே போலீஸ் உதவி நாடப்பட்டது. போலீசார் வந்து, பலாத்காரமாகத் தொழிலாளர்களை வெளியேற்றினார்களென்றும், இதனால் பலர் காயமடைந்தனரென்றும் சொல்லப்படுகின்றன. பின்னர் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர் என்றும், நால்வர் இறந்துபோயினரென்றும், பலர் காயமடைந்தனரென்றும் தெரிய வருகின்றன. இப்பொழுது நிலைமை அமைதியா யிருக்கிறதென்றும், மில் பிரதேசத்தைப் போலீசார் காத்து வருகின்றனர் என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

### அரக்கோணம்

சிக்கனத்தை உத்தேசித்து ஒர்க்ஷாப்பிலுள்ள தொழிலாளர்களிற் சிலரை வேலையினின்றும் எடுத்துவிடுவதைக் கண்டிக்கும் பொருட்டு, அரக்கோணம் எம். எஸ். எம். ரெயில்வே ஒர்க்ஷாப்பிலுள்ள சுமார் 1200 தொழிலாளர்கள் 17-7-31-ல் வேலை நிறுத்தம் செய்தார்கள். சமீபத்தில் சிம்லாவில் ரெயில்வே தொழிலாளர் பிரதிநிதிகளுக்கும் ரெயில்வே போர்டுக்கும் நடைபெற்ற சம்பாஷணைக்குப் பின்னர்கூட, அதிகாரிகள் இந்தச் சிக்கனமுறையை அநுஷ்டித்து வருவது தொழிலாளர்க்குப் பிடிக்கவில்லை. பின்னர், எம். எஸ். எம். ரெயில்வே தொழிலாளர் சங்கத் தலைவராகிய ஸ்ரீமான் வி. வி. கிரி, ஏஜண்டைக்கண்டு பேசினார். வேலையினின்று விலகும்படி நோட்டீஸ் கொடுக்கப்பட்டவர்களை மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்வதாகவும், சிக்கன முறையை அடுத்த மாதம் வரை தள்ளிவைப்பதாகவும் ஏஜண்ட் கூறினார். எனவே, தொழிலாளர்கள் மீண்டும் நிக்கட்டிழமை வேலைக்குச் சென்றார்கள்.

## டெல்லி ஒப்பந்தம்

### காந்தி - வில்லிங்டன் சந்திப்பு

ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி, ஸ்ரீமான் மகாதேவ தேசாய் இவர்களுடன் மகாத்மா காந்தி, 15-7-31ல் சிம்லாவுக்கு வந்தார். பொதுஜனங்கள் இவரை உற்சாகத்துடன் வரவேற்றார்கள். ராய் பகதூர் மோகன்லாலின் வாசஸ்தலமாகிய "பர்க்ரோவ்" என்னுமிடத்தில் தங்கி யிருக்கிறார். பின்னர், இந்தியா அரசாங்கத்தின் ஹோம் இலாகா காரியதரிசியான ஸ்ரீமான் எமர்ஸனைச் சந்தித்து, டெல்லி ஒப்பந்த நிறைவேற்றத்தைப்பற்றிப் பேசினார். இவ்விருவரும் மொத்தம், இரண்டு நாட்களுக்கும் சேர்ந்து, பத்துமணி நேரம் பேசினர். 17-7-31 பகல் 1-30 மணிக்கு ஹோம் அங்கத்தினரான ஸர் ஜேம்ஸ் கிரிராரைக் கண்டு பேச மகாத்மா காந்தி சென்றார். அப்பொழுது நல்ல மழை. இந்தக் கொட்டுகிற மழையில் இவர் சுமார் மூன்று மைல் தூரம் நடந்து சென்று ஹோம் அங்கத்தினரைக் கண்டு பேசினார். சுமார் ஒன்றரை மணி நேரம் இவ்விருவருடைய சம்பாஷணை நடைபெற்றது. 18-7-31 காலை 10-30 மணிக்கு இராஜப்பிரதிநிதி மாளிகையில் மகாத்மா காந்தியும் லார்ட் வில்லிங்டனும் சந்தித்துப் பேசினார்கள். அடிகள் இராஜப்பிரதிநிதி மாளிகைக்குச் சென்றபோது, தனியாக நடந்தே சென்றார். பின்னால் ஒரு ரிக்ஷா வண்டி மாத்திரம் சென்று கொண்டிருந்தது. ஆனால் இவர் அதை உபயோகிக்கவே யில்லை. இவர் இராஜப்பிரதிநிதி மாளிகைக்குச் சென்றபோதும், அங்கிருந்து திரும்பி வந்தபோதும் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் உள்பட நூற்றுக் கணக்கான பேர் வழிநெடுக நின்று இவருக்கு மரியாதை செலுத்தினார்கள். லார்ட் வில்லிங்டனும் காந்தியடிகளும் சுமார் மூன்று மணி நேரம்வரை பேசிக்கொண்டிருந்தார்கள். இராஜப்பிரதிநிதியுடன் ஸ்ரீமான் எமர்ஸனும் இருந்தார். அவர், அநேக தஸ்தாவேஜுகளைக் கூடவைத்துக் கொண்டிருந்தார். ஆனால், காந்தியடிகளிடத்தில், அவருடைய கைத்தடி தவிர வேறொன்றும் இல்லை.

காந்தியடிகள் சம்பாஷணை முடிந்ததும், அன்று (18-7-31) மாலை 4-30 மணிக்கு இராஜப்பிரதிநிதியுடன் பண்டித ஜவஹர்லால் நேரு சந்தித்துப் பேசுவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதன்படி, முன்னாள் சிம்லாவுக்கு வந்து சேர்ந்த பண்டித ஜவஹர்லால் நேரு, தனபதி ஹக்ஸார் என்பவரால் அளிக்கப்பட்ட ஒரு குதிரை மீதேறிக் கொண்டு, இராஜப்பிரதிநிதி மாளிகைக்கு வந்தார். இவரை இன்னாரென்று தெரிந்து கொண்டு உள்ளே விடுவதற்கு நுழைவாயில் லண்டை சிறிது தாமதம் ஏற்பட்டது. ஆனால், அப்பொழுதே, இந்திய அரசாங்க நிருவாகசபைக் கூட்டத்திலிருந்து ஸர்பஸ்லி ஹுசேன் திரும்பிவந்து கொண்டிருந்தார். அவர், பண்டிதரைப் பார்த்து, இவர் வந்துள்ள சங்கதியை, அங்குள்ள குமாஸ்தாவுக்குத் தெரிவித்து உடனே இவரை உள்ளே விடும்படி கூறினார். இச்சமயத்தில் அங்கு வந்து சேர்ந்த ஸர் ஜார்ஜ் ஷூஸ்டர், பண்டிதருடன் பேச விரும்புவதாகத் தெரிவித்தார். எனவே, ஸர் பஸ்லி ஹுசேன் மூலமாக இருவருக்கும் அறிமுகம் ஏற்பட்டது. பிறகு பண்டிதர் மாளிகைக்குள்சென்று, லார்ட்வில்லிங்டனுடன் சுமார் 40நிமிஷநேரம்பேசினார். தேநீர்ப்பானம்அருந்தும்போது தவிர, மற்ற நேரத்தில், இருவரும் தனிமையாகவே இருந்துபேசினார்கள். பண்டிதர்சம்பாஷணைசெய்துவிட்டுத்திரும்பி வந்தபோது, "லார்ட் வில்லிங்டன் உண்மையாளராகவேகாணப்படுகிறார். என்னை அடிக்கடி காண விரும்புவதாகக் கூறினார்" என்று ஒரு பத்திரிகை நிருபரிடம் தெரிவித்தார். 19, 20 தேதிகளில், பண்டிதர், ஸ்ரீமான் எமர்ஸனுடன் பேசினார். பின்னர் ஸர் ஜேம்ஸ்கிரிராரையும் ஸர் ஜார்ஜ் ஷூஸ்டரையும் சந்தித்துப் பேசினார்.

21-7-31 மாலை ஐந்து மணிக்கு மகாத்மா காந்தி, லார்ட் வில்லிங்டனைச் சந்தித்துப் பேசினார்.

# உலகக்காட்சி

## ஹிந்து மதத்தைத் தழுவிய ஓர் ஆங்கில ஸ்திரீ

ஸ்காத்லாந்திலுள்ள எடின்பரோவில் ஸ்ரீமதி ஜேன்ஸ் பியர்ஸ் என்ற ஓர் ஆங்கில மாது வசிக்கிறாள். இவள் ஹிந்து மதத்தில் மிகப் பற்றுக் கொண்டு, அம்மதத்தில் சேர விரும்பினாள். அதற்காக பம்பாயிலுள்ள ஹிந்து மிஷன் தலைவருக்கு எழுதினாள். உடனே சுவாமி சத்தியானந்தர் என்பார், அவளுக்கு ஒரு கடிதம் எழுதி, அதில் அவள் விரதம் இருக்க வேண்டு மென்றும், சுத்தி சடங்குகள் செய்துகொள்ள வேண்டு மென்றும் குறிப்பிட்டிருந்தார். தவிர பகவத்கீதையும் திரிகோணேசுவர சுவாமி கோயிலிருந்து சிறிது நிர்மால்யமும் அனுப்பினார். அப்படியே அவ்வம்மையார் விரதமிருந்து, வேண்டிய சடங்குகளைச் செய்து 31-5-31ல் ஹிந்து மதத்தைத் தழுவினாள். சாந்குமாரி தேவி என்ற ஹிந்துப் பெயரையும் தரித்துக் கொண்டாள். இவள், விரைவில் இந்தியாவுக்கு வந்து ஹிந்து மதப்பிரசாரம் செய்வாள் என்று சொல்லப் படுகிறது.

* * *

## பணத்தை வெறுத்து குணத்தைக் கொண்ட ஸ்திரீகள்

பீஹார் ஒரிஸா மகாணத்தைச் சேர்ந்த லோடிபூர் என்ற கிராமத்திலுள்ள இரண்டு விவாகமான ஸ்திரீகள், தங்கள் ஊரில் பிழைப்பதற்கு வழியில்லாமல், தங்களுடைய இயற்கைத் தொழிலான கல்லுடைக்கும் தொழிலை நாடி வெளியூருக்குச் சென்றனர். டினாபூருக்குச் சென்றபோது, இராமலக்சன், இராமபஜன் என்ற இருவர் இவர்களைச் சந்தித்து இவர்களுக்கு வேலை கொடுப்பதாகக் கூறித் தங்கள் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றனர். அங்கு, இந்த இரண்டு பெண்மணிகளுக்கும் புதிய உடைகள் கொடுக்கப் பட்டன. வேறு இருவரை விவாகம் செய்து கொள்ளும்படி இவர்கள் கூறப்பட்டார்கள். இதற்கு ஸ்திரீகள் ஒத்துக் கொள்ள வில்லை. தங்கள் கணவன்மாரை விடுத்து, கற்புத்தன்மையை இழந்த ஸ்திரீகளாக போகத்துடன் வாழ்வதைவிடக் கல்லுடைத்து ஜீவனம்செய்வதே சிறந்ததென இவர்கள் கூறினார்கள். எனவே, ஒரு ஸ்திரீ கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்லப் பட்டாள். இதற்குள் போலீசார், புலன் விசாரித்து, ஸ்திரீகளை மீட்டுக் குற்றவாளிகளைக் கைது செய்திருக்கிறார்கள்.

* * *

## எல்லாம் ஒரு குழந்தைக்காக!

பேரெல்லி கண்டோன் மெண்டில் வேலை செய்து வந்த இஸ்மெயில் என்னும் ஒரு முகம்மதியருக்கு நான்கு குழந்தைகள் பிறந்தன. இவைகளில் மூன்று குழந்தைகள் துரதிருஷ்ட வசமாக இறந்து போயின. கடைசி குழந்தை பிறந்து பத்து வருஷங்கள் வரை ஒரு குழந்தையும் பிறக்க வில்லை. இதற்காக இஸ்மெயில் மிக மனவருத்தப் பட்டு, ஒரு குழந்தை பிறக்க வேண்டு மென்று ஆவல் கொண்டிருந்தார். எனவே ஒரு மந்திர வாதியின் உதவியை நாடினார். இந்த மந்திரவாதி இஸ்மெயிலின் மனைவியைத் தனியாக ஓரிடத்தில் உட்கார வைத்து மந்திரம் ஜபிப்பதாகப் பாசாங்கு செய்து அவளைக் கெடுத்து விட்டான். உடனே, அந்தமாது, கண்ணும் கண்ணீருமாக ஓடிவந்து தன் கணவனிடம் நடந்த வரலாற்றைக் கூறினாள். இதனால் இஸ்மெயில் மிகக் கோபமடைந்து இரண்டு நாள் வரை ஆகார மெடுத்துக் கொள்ளாமலே இருந்தார். பிறகு மேற்படி மந்திரவாதியைச் சந்தித்து அவரைக் கொன்று விட்டார். இந்தக் கொலைக் குற்றத்திற்கு இவர் பேரெல்லி ஜில்லா நீதிபதியினால் தீவாந்திர தண்டனை விதிக்கப் பட்டார். அலகாபாத் ஹைகோர்டுக்கு இந்த வழக்கு அப்பீலில் வந்தபோது திடீரென்று மூட்டப்பட்ட ஆத்திரத்தினாலேயே இது நேர்ந்ததென்று கூறுவதற்கில்லையென்றும் இவருக்குக் கருணைகாட்டவேண்டுமென்றும் நீதிபதிகள் தீர்ப்புச் செய்திருக்கிறார்கள்.

* * *

## காந்தியடிகளைப்பற்றி ஒரு விநோத சம்பவம்

காந்தியடிகள் லண்டனுக்குச் சென்றால் அங்கு ஸ்ரீமதி முரியல் லிஸ்டர் என்ற அம்மையாரின் விருந்தினராக இருப்பார் என்பது நேயர்களறிந்த விஷயம். இவ்வம்மையார், காந்தியடிகளைப்பற்றி ஒரு விநோதமான சம்பவத்தைக் குறிப்பிடுகிறார். ஒரு சமயம் ஸ்ரீமதி சரோஜனி தேவியார், பம்பாய் தாஜ்மகால் ஹோட்டலில் தங்கியிருந்த போது, அங்கு அவர் நோய்வாய்ப்பட்டார். இதையறிந்த காந்தியடிகள் அவரைப் பார்க்கச் சென்றார். ஹோட்டலிலுள்ள ஒவ்வொருவரும் இப்பெரியாருடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். இச்சமயத்தில், ஒரு சாதாரண கூலியைப்போல் உடைதரித்துக் கொண்டிருந்த ஒருவர், கீழேயிருந்து மேலேற்றிச் செல்லும் மின்சார இயந்திரத்தில் ஏறினார். உடனே அந்த இயந்திரப் பாதுகாவலன் அவரைத் தடுத்து "நீ யார்? காந்தியென்று நினைத்துக் கொண்டாயா? வெளியே போ" என்று வெளியே தள்ளி விட்டானாம். இங்ஙனம் தள்ளப்பட்டவர் காந்தியடிகள். இவர் ஒன்றுஞ் சொல்லாமல், படிக்கட்டு வழியாக மேலேறிப் போய் ஸ்ரீமதி சரோஜனி தேவியைப் பார்த்துவந்தார்.

* * *

## விநோத பொருட்காட்சிச்சாலை

ஐரோப்பா கண்டத்திலுள்ள வியன்னு நகரத்தில் ஒரு விநோதமான பொருட் காட்சிச்சாலை சமீபத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. மனிதர்களுடைய அறிவு எவ்வளவு தூரம் வளர்ச்சி யடைந்திருக்கிறதென்பதை ஆராய்ச்சி செய்வதற்கு உதவியாயிருக்க இஃது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதில் மனிதர்களுடைய மூளைப்பொருள்களே!காட்சிப்பொருள்களாகவைக்கப்பட்டிருக்கின்றன. உலகத்தில் ஒவ்வொரு துறையிலும் பிரபலமடைந்த பெரிய மனிதர் பலருடைய மூளைகள் இங்கு இருக்கின்றன. தவிர, இப்பொழுது உலகத்திலே வாழ்ந்துகொண்டிருக்கும் சுமார் ஆயிரம் அறிஞர்கள் தங்கள் மூளைகளை இக்காட்சிச் சாலைக்குக் கொடுக்க ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். சாதாரண ஓர் ஐரோப்பிய புருஷருடைய மூளை 45 அவுன்ஸ் நிறையுள்ளதாயிருக்கிறது. ஸ்திரீயின் மூளை 40 அவுன்ஸ் நிறையுள்ளது. அறிவு எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாயிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவுமூளையும்கனமாயிருக்கிறது.பைரன் என்ற புலவருடைய மூளை 60 அவுன்ஸ் கனமிருந்ததாம். காண்ட் என்ற தத்துவசாஸ்திரியினுடையமூளை 55அவுன்ஸ் நிறையுடையது. மண்டையோட்டை அளப்பதன் மூலமாக, மூளையின் நிறையைச் சரியாகச் சொல்லிவிடலாம். ஆனால் இதில் விநோதமான ஒரு காட்சி என்னவென்றால், ஒரு முட்டாளின் மூளை 75 அவுன்ஸ் நிறையுள்ளதாயிருந்ததாம்.

*

## மின்சாரப் பண்ணை

உலகத்தில் மிகுந்த நாகரிகமுள்ள பண்ணை யொன்று இங்கிலாந்திலுள்ள ஈஸ்ட்ரினின் ஸ்டெட் என்ற இடத்தில் இருக்கிறது. இஃது அறநூறு ஏக்கா விஸ்தீரணமுடையது. இதை மூன்று பேர் சேர்ந்து நிருவகித்து வருகிறார்கள். அவர்கள் இதில் மின்சார வசதிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்தச் சக்தியைக் கொண்டு 67 விதமான தனித்தனி வேலைகள் இந்தப் பண்ணையில் நடைபெறுகின்றன. இங்கே தேனீக்கள் வளர்க்கப்பட்டு, அவைகளிலிருந்து தேன் உற்பத்தி செய்யப்படுகிறது. இந்தத் தேனீக்கூடுகள், மின்சார சக்தியினாலேயே உஷ்ணப்படுத்தப் பெறுகின்றன. இதனால் தேன் அதிகம் கிடைக்கிறது. குதிரைகளைத் துடைப்பது, சுத்தம் செய்வது முதலிய வேலைகளை ஒரு மின்சாரக் கருவியே செய்கிறது. கோழிகள் வளருமிடத்தில் செயற்கைச் சூரிய வெளிச்சம் உண்டுபண்ணப்பட்டு இதனால் அதிக முட்டைகள் உற்பத்தியாகும்படிசெய்யப்படுகின்றன. பால் கறப்பது, வைக்கோல் உலர்த்துவது, பூச்சிகளை யழிப்பது, உழுவது முதலிய எல்லா வேலைகளையும் மின்சாரக் கருவிகளே செய்கின்றன.

* *

## இறந்தவன் திரும்பினான்

ஸ்ட்ராஸ்பார் என்ற ஊரில் ரிச்சென் என்ற ஒருவன் இருந்தான். இவன் மிகக் குடிகாரன். ஒருநாள் பாதிராத்திரியில் நன்றாகக் குடித்துவிட்டுச் சாக்கடை யோரமாகப் புரண்டு கொண்டிருந்தான். அங்கேயுள்ள ஒரு போலீஸ்காரன் இவனைக் கண்டுபிடித்து, இவன் விலாசம் முதலியவைகளைத் தெரிந்து கொண்டு, இவன் வீட்டண்டை சென்று விசாரித்தான். வீடு பூட்டப்பட்டிருந்தது. அண்டையில் விசாரித்தபோது, ரிச்சென் என்பான் இறந்துபோய் இரண்டு நாளாயிற்றென்றும், அடுத்தநாள் காலை தகனச் சடங்குகள் நடைபெறப் போகின்றனவென்றும் தெரிவித்தார்கள். சடங்குக்கு முன்னர் ரிச்செனின் மனைவிமக்கள் முதலியோர் ரிச்சனின் உடலைத் தம் வீட்டில் வைத்துப் பூட்டிவிட்டுத் தம் உறவினர் ஒருவர் வீட்டில் தங்கியிருந்தார்கள். இவர்கள் சென்றபின் ரிச்சென் உயிர்த்தெழுந்து வீடு பூட்டப்பட்டிருப்பதையும் அங்குஒருவருமில்லாதிருப்பதையுங்கண்டு அதிசயித்துவீட்டிலிருந்தபொருள்களை உண்டுவிட்டுக் கதவையுடைத்து வெளி வந்து தன் உறவினரைத் தேடிச்சென்றான். செல்லும்போது வழியிற் குடித்து விட்டு மயக்க மிகுதியால் சாக்கடையோரமாகக் கிடந்து புரண்டுகொண்டிருந்தான். இவன் இறந்துபோனதாக உறவினர் கூறியதற்குக் காரண மென்னவென்றால், பல நாளாய் நோய்வாய்ப்பட்டிருந்து ஒரு நாள் பல வீனத்தினால் நீண்ட நித்திரையிலாழ்ந்து விட்ட இவனை டாக்டர் இறந்து பட்டதாகத் தெரிவித்ததேயாகும். இப்படி கூறியதற்காக ரிச்சென் டாக்டர் மீது நஷ்டஈடு வழக்குத் தொடுத்திருக்கிறானாம்.

# மணித்திரள்

ஸ்விட்ஜர்லாந்தில் மரண தண்டனை விதிப்பது நிறுத்தப்பட்டுவிட்டது.

*

பனமா நகரத்தில், யாராவது ஒருவன்,ஒரு கொசுவைக்கண்டால்,அவன் உடனே போலீசாருக்குத் தெரிவிக்க வேண்டுமாம்.

* *

ஜார்ஜ் மன்னருடைய சொந்த உபயோகத்திற்காக சமீபத்தில் தங்கத்தினால் செய்யப்பட்ட ஒரு டெலிபோன் அளிக்கப்பட்டிருக்கிறது.

பாரிஸ் நகரத்தில் கண்ணடியாலேயே ஒரு வீடு கட்டப் பட்டிருக்கிறது. இதில் தரை, சுவர் முதலியனவெல்லாம் கண்ணடி மயமாயிருக்கும்.

* *

இங்கிலாந்தில் உடை சீர்திருத்த சபை யொன்று ஏற்பட்டிருக்கிறது. இச்சங்கத்தார், காலில் செருப்பணிவதே சிறந்ததென்று பிரசாரம் செய்கிறார்கள்.

* *

நண்டு ஒரே சமயத்தில் பதினாயிரம் முட்டைகள் இடுமாம். செல் என்று சொல்லப் படும் கரையான் ஒரு நாளைக்கு எண்பதினாயிரம் முட்டைகள் இடுமாம்.

*

கோலா மாகாணத்தில், மறியல் செய்யும் தொண்டர்கள் முகத்தில், கள்ளைவாரி அடித்து ஹிம்சிக்கிறார்கள் என்று 'சண்டே டைம்ஸ்' பத்திரிகை கூறுகிறது.

* *

கார்வார் என்ற இடத்தில் நாற்பது கள்ளுக் கடைகள் ஏலம் போடப்படுமென்று விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. ஆனால் நான்கு கடைகளே ஏலத்திற்கு விட முடிந்தது.

*

தேனீக்களில் ராஜா தேனீ என்றும் ராணிதேனீ என்றும் இருவகையுண்டு. இராணிதேனீ மூன்று வருஷமே உயிர்வாழ்ந்திருக்கும். அதற்குள் இஃது ஐம்பது லட்சம் முட்டைகளை இடுமாம்.

*

ஐயந்தி தேவியென்ற ஐந்து வயதுடைய ஒரு பெண், கங்கை நதியில் நீந்தி போட்டிப் பந்தயத்தில் வெற்றி பெற்றதற்காக இரண்டு தங்கப் பதக்கங்கள் முதலியன பரிசாகப் பெற்றிருக்கிறாள்.

* *

பம்பாயிலுள்ள யமுனபாய் என்ற ஒருவர், மோடார் வாடகை வண்டிகளை வரவழைத்து அதில் ஏறிச் சென்ற பிறகு வாடகை கொடாமல் இருப்பதற்காகப் போலீசாரால் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

* *

இங்கிலாந்தில், மிகவும் ஒட்டடைபடிந்த ஊர் ராச்டேல் என்பதாகும். இதில், ஆகாசத்திலிருந்து கீழே படியும் அசுத்தங்கள்மட்டும் ஒரு வருஷத்திற்கு ஒரு சதுரமைலுக்கு 793 டன் நிறையுள்ளதாயிருக்கிறது.

* *

பாட்னு ஹைகோர்ட் பிரதம நீதிபதி ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறும்போது, "காங்கிரஸ்காரர்கள் இப்பொழுது கொள்ளையடிக்கக் கூட ஆரம்பித்துவிட்டார்கள்" என்று கூறினாராம். என்ன ஆதாரத்தின் மேலோ?

*

இரண்டாவது முறை கூடப்போகும் வட்ட மேஜை மகாநாட்டுக்கு, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஐம்பதினாயிரம் பவுனும் இந்தியா அரசாங்கத்தார் ஐம்பதினாயிரம் பவுனும் செலவழிப்பர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

* *

வாலன்ஷியா என்றஊரில்! இனிக்கோழிக்குஞ்சுகள், முயல்கள் முதலியன ஒன்றும் இருக்கக் கூடாதென்று ஓர் உத்தரவு பிறந்திருக்கிறது. இவைகளினால் ஜனங்களின் சுகாதாரம் பாதிக்கப்படுகிறதென்று காரணம் காட்டப்பட்டிருக்கிறது.

* *

சமீபத்தில் ஜர்மனிதேசத்தில் ஏற்பட்ட பணநெருக்கடி காரணமாகச் சென்ற திங்கட்கிழமை யன்று மாத்திரம் லண்டனிலிருந்து ஜர்மனியின் தலைநகரான பர்லினுக்கு ஆயிரம் முறை டெலிபோன் பேச வேண்டிய அவசியம் நேர்ந்ததாம்.

தளபதி இங்பிரிக்ஸ்டென் என்பார் ஒருவர், சமீபத்தில் ஒரு திமிங்கிலத்தைப் பிடித்தார். சாதாரணமாக ஒரு திமிங்கிலத்தின் வயிற்றிலிருந்து 400 பவுன் பெறுமான எண்ணெய் கிடைக்குமாம். ஆனால் இந்தத் திமிங்கிலம் 40,000 பவுன் பெறுமானமுள்ளதாம்.

* *

"மெயிட் ஆப் ஆர்லியன்ஸ்" என்ற ஒரு பிரெஞ்சுக் கப்பலில் "ஜிஞ்சர்"என்ற ஒருபூனை வளர்க்கப்பட்டு வருகிறது. இஃது எப்போதும் பூமியில் அடி எடுத்து வைத்ததில்லையாம். சமுத்திரத்திலேயே இதுவரை இது 50,000 மைல் பிரயாணஞ்செய்திருக்கிறது.

* *

இந்த வருஷக் கடைசியில், பிரிட்டனுக்குச் சொந்தமாக நாற்பதினாயிரம் மைல் தூரம் செல்லக்கூடிய ஆகாய விமானப் பாதைகள் ஏற்பட்டிருக்கும். இந்த வருஷக் கடைசியில் மூவாயிரம் மைல் நீளமுள்ள ஆகாயப் பாதை இங்கிலாந்துக்கும் ஆப்பிரிக்காவுக்கும் ஏற்படும்.

* *

ஸ்ரீமான் இராமகுமார் என்னும் ஓரிளைஞர் இப்பொழுது கல்கத்தாவுக்கு வந்திருக்கிறார். நாடக வியலில் சிறந்த நிபுணர். இவர் பதின்மூன்று பாஷைகளை நன்றாகப் பேசுகிறார். எல்லாரைப் போலவும் வேஷம், போட்டுக்கொள்வதில் நிபுணர். ஒரு சமயம், ஸ்ரீமதி சரோஜனி தேவியைப் போல் வேஷம் போட்டுக் கொள்வதற்கு இவருக்கு ஒன்பது மணி நேரம் பிடித்ததாம்.

* *

சென்ற வருஷம், பிரான்சிலுள்ள விநோதங்களைக் கண்டுகளிக்க வெளிநாடுகளிலிருந்து இருபது லட்சம் பேர் வந்தார்கள். இவர்களால் பிரான்சுக்குக் கிடைத்த லாபம் பத்து கோடி பவுன். ஜர்மனி, தன் தேசத்திலுள்ள விநோதங்களை வெளிநாடுகளில் விளம்பரப்படுத்த எட்டு லட்சம் பவுன் செலவழித்தது. இதன்பயனுக பன்னிரண்டு லட்சத்து ஐம்பதினாயிரம் பிரயாணிகள் அந்நாட்டிற்கு வந்தார்கள். இவர்களால் மூன்று கோடி பவுன் ஜர்மனிக்குக் கிடைத்தது.

* *

லண்டனிலுள்ள கிங்ஸ்லி மண்டபத்தில் மகாத்மாகாந்தி தங்கியிருக்கும்போது, அவருக்கு ஆட்டுப்பால் வேண்டு மென்பதற்காக, ஐரோப்பாவின் பல பாகங்களிலிருந்து பலர் ஆடுகள் அனுப்புவதாக இப்பொழுது முதல் ஸ்ரீமதி லெஸ்டர் என்ற அம்மையாருக்கு எழுதியிருக்கின்றனர். கார்டிப் என்ற ஊரிலிருந்து ஒருவர், தமது செலவிலேயே ஆடுகளை லண்டனுக்கு அனுப்பி வைப்பதாயும் மீண்டும் தமது செலவிலேயே தம்மூருக்கு அழைத்துக்கொண்டு போவதாகவும் தெரிவித்திருக்கிறார். இன்னும் பலர், அவ்வப்போது, காந்தியடிகளின் உபயோகத்திற்காக புதிய பழங்கள் முதலியவைகளை அனுப்புவதாகக் கூறியிருக்கின்றனர்.

* *

நான்கு மைல் தூரம் பின் தொடர்ந்து ஓடி சில திருடர்களைப் பிடித்தளித்தமைக்காக நான்கு சீக்கியர்கள் லாகூர் போலீசாரால் சன்மானமளிக்கப்பட்டிருக்கின்றனர். ஓரிளைஞர், பிகிவண்டி என்ற ஊருக்கு அருகாமையில் நண் பகலில் ஓர் ஒட்டகத்தின்மீது ஏறிச் சென்று கொண்டிருந்தார். அப்பொழுது இரண்டு கள்வர் திடீரென்று வந்து, இவரைத் தாக்கி இவருடைய சாமான்களை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டனர். அருகாமையில் ஒரு நிலத்தில் வேலை செய்துகொண்டிருந்த சில சீக்கியர் இதைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு அந்தத் திருடரைத் தூரத்திக்கொண்டு ஓடிப்பிடித்தனர். இதற்காகவே, போலீசார் இவருக்குச் சன்மானமளித்தனர்.

* *

டென்மார்க்கு ராஜ குடும்ப நகைகள் 'ரோஸென்பர்க் மாளிகை' என்ற இடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைத்திருடர் முதலியோர் எவரும் அணுகா வண்ணம், சுற்றி மின்சாரக்கம்பிகள் முதலியன போடப்பட்டிருக்கின்றன. நகைகளைப்பார்க்கச் செல்வோர் எவரேனும், மேற்படி பாதுகாப்பு ஏற்பாடுகளில் எதையேனும் தொட்டுவிட்டால் உடனே பெரிய மணிகள் அடிக்கும்; மாளிகையின் வாயிற்கதவுகளெல்லாம்மூடிக்கொள்ளும்; இன்னும் வெளியில் எவரும் செல்லாதபடி தடுப்பதற்குரிய முறைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சமீபத்தில் சில யாத்திரிகர், இந்த நகைகளைப் பார்க்கச் சென்றபோது, தெரியாமல் இந்தப் பாதுகாப்பு ஏற்பாடுகளில் ஒன்றைத் தொட்டுவிட்டனர். உடனே, அந்த மாளிகை முழுவதும் பெரிய குழப்பம் ஏற்பட்டுவிட்டதாம். பிறகு உண்மை தெரிந்து அனைவரும் அடங்கினர்.



# நாகரிகக் கல்வி

ஒரு சிறு கதை

"மௌத்கல்யன்"

(சென்றவாரத் தொடர்ச்சி)

III

கொட்டையூரில் ஜமீன்தாரின் நிலைமைக் கவனிப்போம். தமது மகனைச் சென்னைக்கு அனுப்பியது முதல், மாதம், ஆயிரம் ரூபா வீதம் அனுப்பிக் கொண்டு வந்தார். ஜமீன்தார் பிள்ளை யல்லவா? அதற்குத் தகுந்த அந்தஸ்துடன் வாழ்ந்து வரும்படியும் கூறியிருந்தார். கால நிலை சரியாயில்லாமலிருந்த போதிலும், தமது நான்காவது மனைவி எவ்வளவு முணு முணுத்துக் கொண்டபோதிலும், மாதம் இரண்டாந்தேதியன்றே ஆயிரம் ரூபாய்க்கு ஓர் உண்டியல் அனுப்புவதில் தவறுவதே யில்லை. இதற்காக இவர் மகத்தான தியாகம் செய்ய வேண்டியது அவசியமாயிற்று. தமது தாயாதிகள் என்று சொல்லிக்கொண்டிருந்த சிலருக்கு மாதந்தோறும் இரண்டு அல்லது மூன்று ரூபா கொடுத்து வந்தார். அவைகளை இப்பொழுது நிறுத்தி விட்டார். கொட்டையூரிலுள்ள கும்ப மூர்த்திசுவாமி கோயிலுக்கு வாரத்திற்கொருமுறை ஒரு மரக்கால் அரிசியைச் சமைத்து, நைவேத்தியம் செய்து அதை ஏழைகளுக்கு உணவாக அளிக்கவேண்டு மென்று கட்டளை ஏற்படுத்தி யிருந்தார். கும்ப மூர்த்தி சுவாமி வாயிலும், அவர் மூல மாதுவழைகள் வாயிலும் மண் விழுந்தது. பரம்பரை தர்மத்தை அநுசரித்து, தமது ஜமீனில், சமஸ்தான தமிழ்ப் பண்டிதர், ஜோசியர், விகடகவி முதலியவர்களை மாதம் ஒரு வராகன் சம்பளத்தில் அமர்த்தி யிருந்தார். அவர்களுக்குச் சீட்டுக் கொடுத்தாய்விட்டது. தமது நான்காவது சம்சாரத்திற்கு, வைர அட்டிகை யொன்று செய்து போடுவதாக விவாக காலத்தில் வாக்குறுதி கொடுத்திருந்தார். அந்த வாக்குறுதியைத்தமது ஜமீனுக்கு காமையில் ஓடும் காணற்றிலே மிதக்க விட்டு விட்டார். இன்னும் இங்கெடுத்து இயம்பொணுதியாகங்களை அவர் செய்திருக்கிறார். எப்படியாவது பையன் பி.ஏ.பாஸ்செய்துவிட்டு ஐ.சி. எஸ். பரீட்சைக்குச் செல்ல வேண்டு மென்பது இவர் பேராவா. ஆனால் பையனுக்கு வயது அதிகமாகிவிட்டதே யென் பதைப்பற்றி இவர்க்கு நினைவே இல்லை, நினைவிருந்து, "எக்ஸெம்ஷன்" (விலக்கு) வாங்கிவிடலாமென்று கருதி யிருந்தாரோ என்னவோ நாமறியோம்.

கொட்டையூர் ஜமீன் மிகச்சிறியது. அதிலிருந்து மாதம் ஆயிரம் ரூபாய் அனுப்புவதென்றால் அஃதெப்படி சாத்தியப்படும்? ஆனால் இந்த ஆயிரம் ரூபாவும் மிஸ்டர் ராம்ஸேவுக்குப் போதவில்லை. அடிக்கடி தனக்குப் பணம் போதவில்லை யென்று கடிதம் வரும். 'ட்ரெஸ்' வாங்கிக் கொண்டேன்; கார் 'ரிபேர்' செய்தேன்; 'டாக்டர் பீஸ்' கொடுத்தேன்;' என்று ஒவ்வொரு மாதமும் ஏதாவது ஒரு காரணத்தைக் காட்டி, அதிகப் படியாக ஐந்நூறு ரூபாய்க்குக் குறையாமல் வாங்கிவிடுவோர். மிஸ்டர் ராம்ஸே. என்ன செய்வார் ஜமீன்தார்! ஒருபக்கம் பி. ஏ. படிப்பு! மற்றொரு பக்கம் 1500 ரூபா செலவு! திக்குமுக்காடினார்! பி.ஏ. வகுப்புப் படிக்கும் ஒருவனுக்கு மாதம் இவ்வளவு செலவு ஏன்? என்று இவரை யறியாமலே இவருக்குச் சில சமயங்களில் ஏக்கம் பிடித்து விடும். தூக்கம் வாராது; இச்சமயத்தில் நான்காவது மனைவி, தலையணை மந்திரோபதேசத்திற்கு ஆரம்பித்து விடுவாள். போதும் இந்தப் பிழைப்பு என்று ஆகிவிடும் ஜமீன்தாருக்கு! பிள்ளையின் படிப்பை நிறுத்தி விடலாமென்றால், அது முடிகிற காரியமா? வயது வந்த பிள்ளையல்லவோ? தவிர, படிப்பை நிறுத்தலாம்! பணச் செலவை நிறுத்த முடியுமோ?

பார்த்தார் ஜமீன்தார்! ஒன்றும் முடியவில்லை. பாங்கி சுகுணலய செட்டியாரிடம் தஞ்ச மடைந்தார். தமது ஜமீனை அடகு வைத்து நூற்றுக்கு ஒன்றரை வட்டி விகிதம் கடன் வாங்கினார். செட்டியாருக்கு வலிக்கிறதா? சந்தோஷத்துடன் கொடுத்தார். இப்படிச் சுமார் ஒன்றரை வருஷ காலமாக, மாதம் இரண்டாயிரத்திற்குக் குறையாமல் கடன் வாங்கிக் கொண்டுவந்தார். செட்டியாரும், வருஷத்திற்கொருமுறை, சேரும் வட்டியை அசலுடன் கூட்டி, கணக்கிடத் தொடங்கினர். ஜமீன்தாருக்கு ஏக்கம் பிடித்துவிட்டது. ஆயினும் தேகம் வில்லை என்பதை வாசகர்கள் மறந்திருக்கமாட்டார்கள். செலவைச் சுருக்கும்படி பிள்ளைக்குப் பல முறை கடிதம் எழுதினர். என்னுல் எவ்வளவு செலவைக் குறைக்க முடியுமோ அவ்வளவு குறைத்துக்கொள்ளமுயல்வதாகவும், வாங்கவேண்டிய புஸ்தகங்களைக்கூட வாங்காமல், "லைப்ரெரி"யில் சென்று படிப்பதாகவும் பணிவுடன் எழுதினார் திருமகனார். ஆயினும் ஜமீன்தாருக்குச் சந்தேகம் தீரவில்லை. மெய்ஞ்ஞான தேசிகருக்கு இரகசியமாக ஒரு கடிதம் எழுதி, மிஸ்டர் ராம்ஸேயின் உண்மை நிலையினைத் தெரிவிக்கும்படி கேட்டிருந்தார். தேசிகருக்கு மிஸ்டர் ராம்ஸே மீது எவ்வளவு கோபம் இருந்ததென்பதை நாம் சொல்லவேண்டியதில்லை. இவனுடைய 'தன'த்தனமெல்லாம் எத்தனை நாள்?" என்று தன்னுள் நகைத்துக் கொண்டு, தேசிகர், ஜமீன்தாருக்கு, இங்கே நடக்கும் அக்கிரமங்களை யெல்லாம் விரிவாக எழுதி யனுப்பிவிட்டார். இதைக்கேட்ட பிறகுதான், ஜமீன்தார் சென்னைக்கு வரத் தீர்மானித்தார். தாம் எழுதிய கடிதத்தைப் பற்றி, இளைய ஜமீன்தாரின் எதிரிலேயே பெரிய ஜமீன்தார் எங்கு பிரஸ்தாபித்து விடுகிறாரோ என்ற அச்சத்தினாலேயே, அவருடன் மெய்ஞ்ஞான தேசிகர் எழும்பூர் ஸ்டேஷனில் பேசாமல் மௌனஞ் சாதித்தார். தான் செய்யும் செலவுக்கு ஓர் ஆதாரம் காட்டும் பொருட்டே, மிஸ்டர் ராம்ஸே யும், தனது மோடார் வண்டி 'ரிபேருக்குப்' போயிருக்கிற தென்று சொல்லி விட்டு 'டாக்ஸி'யுடன் ஸ்டேஷனுக்கு வந்தார். இது மெய்ஞ்ஞான தேசிகருக்கும் தெரியும்.

IV

இந்தச் சால் பக்தான மிஸ்டர் ராம்ஸே சென்னைக் கீழ்ப்பாக்கத்திலுள்ள "லிலி லேக்" என்ற பங்களாவில் வசித்து வந்தார். இந்தப் பங்களாவுக்கு முதலில் "ரத்னகரம்" என்று பெயர் இருந்தது. ஆனால் அஃது இந்தியப் பெயராயிருக்கிறதென்றும் அதனால் அழகாயில்லை யென்றும், வீட்டுச் சொந்தக்காரரிடம் கூறி, "லிலிலேக்" என்ற ஆங்கிலப் பெயரை வைத்தார். தன் பெயரையே மாற்றிக் கொண்ட மிஸ்டர் ராம்ஸே பங்களா பெயரை மாற்றியதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பங்களாவுக்குள் நுழைந்தால், அங்குள்ள எல்லாம் ஆங்கிலத் தோரணியிலேயே இருக்கும். தவசுப் பிள்ளை பட்லராகவும், வேலைக்காரன் 'பாய்' ஆகவும், தோட்டக்காரன் 'கார்ட்னர்' ஆகவும் இந்த மாளிகையில் விளங்கினார்கள். வந்தவரை வாவென்றழைக்க ஒருவருமில்லாவிட்டாலும், குரைத்து விரட்டியடிக்க நுழைவாயிலண்டை இரண்டு பெரிய நாய்கள் கட்டப்பட்டிருந்தன. இந்தப் பங்களாவைச் சுற்றியிருந்த தோட்டத்தை மிஸ்டர் ராம்ஸே புதுப்பித்தார். எப்படி? இவர் வாசத்திற்கு முன்னர் இங்கு, மல்லிகை, முல்லை, ரோஜா, சம்பங்கி, வில்வம், அலரி முதலிய புஷ்ப, பத்திர தினுசுகள் இருந்தன. அவைகளை யெல்லாம் எடுத்துவிட்டு, நல்ல குரோடன்ஸ்களை வைத்தார். இந்தக் குரோடன்ஸ்களின் பலவிதமான பெயர்களைக் கற்றுக்கொள்வதில் அதிக சிரத்தையுங் காட்டினார். இவருடைய தினசரி வாழ்க்கை வாசகர்களுக்கு மிகவும் ருசிகரமாக இருக்குமல்லவா?

காலையில் சரியாக எட்டு மணிக்கு எழுந்திருப்பார். கோட்டுவாய் பெருக, கண்ணை மூடிக் கொண்டே ஸ்னான அறைக்குச் செல்வார். அங்கு, டூத்பேஸ்டும், ப்ரஷூம் தயாராக வைக்கப்பட்டிருக்கும். சிமையிலிருந்து தருவிக்கப்பட்ட டூத்பேஸ்டைத்தவிரவேறெதையும் இவர் உபயோகிப்பதில்லை. தந்த சுத்தியானதும், நேரே கண்ணடியண்டை போய் நிற்பார். "பாய்" வந்து தலையில் 'ஹேர் ஆயில்' தடவி ஒழுங்காக வாரிவிடுவான். அப்படியே 'டீ ரூமுக்கு'ச் செல்வார். அங்கே "சோடாஹாஸரி" சாப்பிட்டு விட்டு, "டிரெசிங் ரூமுக்கு"ச் சென்று ஆங்கில உடைகளைத் தரித்துக்கொண்டு, இரண்டொரு புஸ்தகம், நோட்புக்கு இவைகளுடன் தயாராயிருப்பார். இதற்குள் மணி ஒன்பதாகிவிடும். உடனே கார் வந்து நிற்கும். அதில் ஏறிக் காலேஜுக்குச் செல்வார். பத்து மணிக்குக் காலேஜாகும், தன்னுடைய 'காலேஜ் மேட்'களை யெல்லாம் அழைத்துக்கொண்டு போவதற்காக, இவர், ஒன்பது மணிக்குப் புறப்படுவது வழக்கம். புறப்படுமுன் எதை மறந்தாலும் மறப்பார், சிகரெட் டின்னையும், 'மாச்பாக்ஸை' (தீப்பெட்டி)யும் மறக்கமாட்டார். பகல் பன்னிரண்டு மணிக்குக் காலேஜிலிருந்து திரும்பி வந்ததும் 'கலர்' ஒன்று சாப்பிட்டுவிட்டு, சிறிது நேரம் சிரமபரிகாரஞ்செய்துகொண்டு, பின்னர் சிற்றுண்டி அருந்திவிட்டு, காலேஜுக்குச் செல்வார். மாலை, டாக்கீஸ், பீச், சினிமா 'பலர்' வீடுகள் முதலியவைகளைப் பார்த்துவிட்டு எட்டு மணிக்கு மேல் வந்து, ஸ்னானம் செய்துவிட்டு இராச்சாப்பாடு நடக்கும். அதற்கு மேல் சிநேகிதர்கள் வந்து விடுவார்கள். இரவுபன்னிரண்டு அல்லது ஒரு மணி வரை, ஆட்டம், பாட்டம், சீட்டுக்கச்சேரி முதலியன ஆடம்பரமாக நடக்கும். மிஸ்டர் ராம்ஸேயின் தினசரி வாழ்க்கை இப்படி நடைபெறுகிறது என்று சுருக்கமாகச் சொல்லலாம். ஆனால் இவர் படிப்பது எப்பொழுது என்று நண்பர்கள் கேட்கலாம். பரீக்ஷா காலத்தில் யாரைப் பார்த்து எப்படி எப்படி சரிப்படுத்த வேண்டுமோ அப்படிச் செய்வதில் 'இவர் மிக சமர்த்தர்'. படிக்காமலே பரீக்ஷையில் பாஸ்செய்வது விசேஷமல்லவா?

மிஸ்டர் ராம்ஸேவுக்குக்குளிர்ந்த தென்றல் காற்று பிடியாது; மின்சார விசிறிக்காற்றே பிடிக்கும். சூரிய வெளிச்சத்தில் படிப்பதைவிட, மின்சார வெளிச்சத்தில் படிப்பதற்கு ஆவல்கொள்வார். தண்ணீரைவிட சோடா, கலர் இவைகளைப் பருகுவதிலேயே இவருக்குப் பிரியம். ஆம்! இவைகள் யாவும் நாகரிகக் கல்வியின் விளைவுகள்! இது நிற்க.

V

ஜமீன்தார் மெதுவாக ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து "லிலிலேக்கு"க்கு வந்துசேர்ந்தார். இவர், வருவாரென்று தெரிந்து, மிஸ்டர் ராம்ஸே, வீட்டு அமைப்பை, இந்திய சம்பிரதாயத்திற்குத் தகுந்தபடி சரிப்படுத்திவைத்திருந்தார். தன்னுடைய டியூடரையும் பயமுறுத்தி, தான் ஒழுங்காக, குலதர்மம் தவறுமல் நடந்துகொண்டு வருவதாகத் தகப்பனுரிடம் சொல்லச்சொல்லியிருந்தார். ஜமீன்தார் வந்த தினத்தன்று மிஸ்டர் ராம்ஸே, சிரஞ்சீவி இராமசாமிப்பிள்ளையாகத் திருநீறு தரித்துக்கொண்டு தகப்பனுடன் தரையில் உட்கார்ந்து உண்டார். என்ன அதிசயம்! வேலைக்காரர்கள் ஆச்சரியப் பட்டார்கள்! ஆனல், 'நாயனு' நம்மீது சந்தேகங்கொண்டு வந்திருக்கிறார் என்று அவருடைய முகஜாடையிலேயே மிஸ்டர் ராம்ஸே நன்கு தெரிந்துகொண்டார்.

ஜமீன்தார்கோவிந்தராஜப் பிள்ளை,உண்டபின் சிறிது களைப்பாறினர். பிறகு தகப்பனுருக்கும் பிள்ளைக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது:—

தகப் :—தம்பீ! எப்படியிருக்கிறது உன் படிப்பெல்லாம்?

பிள்ளை :—இந்த வருஷம் கட்டாயம் எனக்குப் பாஸ்கிடைக்கும் என்று சொல்லி இருமினர்.

தகப் :—என் தம்பீ! உடம்பு நிரம்ப இளைத்திருக்கிறதே. என்ன காரணம்?

பிள்ளை :—ஒன்றுமில்லை; இராத்திரியில் கண்விழித்துப் படிக்கவேண்டியதா யிருக்கிறது.

தகப் :—இல்லை; மார்கூண்டு ஊட்டியிருக்கிறது; கன்னத்தில் குழிவி மூழ்ந்திருக்கிறது; உதடு கறுத்திருக்கிறது.

மிஸ்டர் ராம்ஸேவுக்கு இதைக்கேட்டதும் மிகுந்த கோபம் வந்துவிட்டது. "என்ன நாயனு! என்னை அவமானப்படுத்தத்தான் இங்கே வந்தீர்களோ?" என்று கடுகடுத்துக் கேட்டுவிட்டு, இடத்தைவிட்டு எழுந்தார். அச்சமயத்தில், தெருப்பக்கம், ஒரு சைகின் மணி சப்தம் கேட்டது. கூட "கொட்டையூர் ஜமீன்தார்—டெலிகிராம் சார்!" என்ற குரல் உண்டாயிற்று. மிஸ்டர் ராம்ஸே சென்று தந்தியை வாங்கித் தகப்பனரிடம் கொடுத்தார். 'நீதான் படி' என்றார் பெரியவர். மிஸ்டர் ராம்ஸே தனக்குள் படித்துக் கொண்டார். அவர் முகம் உடனே வெளுத்துப்போயிற்று. "என்ன? உரக்கச் சொல்" என்றார் தகப்பனர். "நீங்கள் சுகுணலாய செட்டியாருக்குக் கொடுக்கவேண்டிய முப்பத்தேழாயிரம் ரூபாவுக்கு ஜமீனை 'அட்டாச்மெண்டு' செய்யப்போகிறாராம்" என்றார் நாகரிகக் கல்வி பயின்று வரும் திருக்குமாரர். பெரியவர் அப்படியே நாற்காலியில் சாய்ந்தார். மிஸ்டர் ராம்ஸே உள்ளே சென்று முகத்தைத் துணியால் மறைத்துக் கொண்டு கட்டிலின்மீது படுத்தார்.

---

சட்ட சபையில் பலத்தவாதம் ஒன்று நடை பெற்றுக் கொண்டிருந்தது. எதிர்க் கட்சியினரால் அடிக்கடி தடை செய்யப் பட்ட ஓர் அங்கத்தினர் கோபங்கொண்டு, "சில அங்கத்தினர்கள் முட்டாள்கள்" என்று கூறினர். இது மரியாதைக் குறைவான பேச்சென்றும், இதை உடனே வாபீஸ் வாங்கிக் கொண்டு எழுத்து மூலமாக மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டு மென்றும் எதிர்க் கட்சியினர் கூறினர். கோபமடைந்த அங்கத்தினர் பிறகு சாந்தமடைந்து, தாம் கூறியதற்காக வருந்துவதாகவும் மறுநாள் எழுத்து மூலமாகத் தமது மன்னிப்பை எழுதி சபையின் நுழைவாயிலில் ஒட்டிவிடுவதாகவுங் கூறினர். மறுநாள் சபையில் பின்வரும் அறிக்கை ஒட்டப்பட்டிருந்தது. "அங்கத்தினரிற் சிலர் முட்டாள்களல்லர்."

மௌலானா ஷவுகத்தலி 21-7-31ல் சென்னைக்கு வந்திருக்கிறார்.

o o o

சிக்கனத்தை உத்தேசித்து, பிஷாவரிலுள்ள மிருகக்காட்சிச் சாலையை, நகரசபையார் மூடிவிட்டனர்.

o o o

இந்தியா அரசாங்கத்துச் சட்ட அங்கத்தினர் பதவியை ஸர் ஸி. பி. இராமசாமி ஐயர், 7-8-31ல் ஏற்றுக்கொள்வார்.

o o o

காந்தியடிகளின் சிஷ்யையான மீராபாய் என்னும்மிஸ் ஸ்லேட் அம்மையாரின் தாயார் சென்றவாரம் இங்கிலாந்தில் இறந்து விட்டார்.

o o o

மாஜி கெய்சருடைய மூன்ருவது மகன், ஹாமலின் என்ற ஓர் ஊரில் சமீபத்தில் நடைபெற்ற ஒரு தெருச்சண்டையில் கைகலந்துகொண்டார்.

o o o

தார்வார் ஜில்லாவில் காலரா நோய் மிக மும்முரமாகப் பரவியிருக்கிறது. ஒரு வாரத்தில் 353 பேர் இறந்துபோயினர். 686 பேர் இந்நோயினால் தாக்கப்பட்டனர்.

o o o

லாகூரிலுள்ள ஒரு ஹிந்து பாரிஸ்டருடைய பெண்ணைத் தாக்கிய குற்றத்திற்காக ஒரு முஸ்லிம் இளைஞர் ஐந்து வருஷக் கடுங்காவல் தண்டனையும் ஐம்பது ரூபா அபராதமும் விதிக்கப் பட்டார்.

o o o

லாகூரிலுள்ள மாஜி அஸிஸ்டெண்டு சர்ஜன் டாக்டர் லட்சுமணதாஸ் பலி என்பார், ஸ்ட்ரிச்னைன் என்ற ஒரு விஷ திராவகத்தைத் தண்ணீரென்று தவருகக் கருதிக் குடித்துவிட்டு இறந்துபோனார்.

o o o

இந்தோர் சமஸ்தானத்திலுள்ள சுதேசி மில்தொழிலாளர்கள் சென்ற 10-7-31 முதல் வேலை நிறுத்தம் செய்திருக்கின்றனர். இதற்குக் காரணம் இவர்களுடைய கூலி விகிதம் குறைக்கப்பட்டமையே யாகும்.

o o o

வடகானரா மாகாணத்தில் கிஸ்தி செலுத்தாத காரணத்திற்காக அபராதமும் நோட்டீஸ் கட்டணமும் விதிக்கப்பட்டவைகளைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று அரசாங்கத்தார் உத்தரவுசெய்திருக்கின்றனர்.

o o o

இப்பொழுது பாரிசிலிருக்கும் ஸ்ரீமான் வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார், நோயாய் இருப்பதால், அவர் எங்கும் பிரசங்கம் முதலியன செய்யக்கூடாதென்று வைத்தியர்கள் கூறியிருக்கின்றனர்கள். இதனால் இவர் இது காலை பாரிசிலேயே தங்கியிருக்கிறார்.

o o o

ஜர்மனிக்கு ஏற்பட்டிருந்த பண நெருக்கடியானது ஒருவாறு தீர்ந்துவிட்டது. இதற்குக் காரணம் பிரெஞ்சு அரசாங்கத்தார், அதற்குக் கடன் கொடுக்க இசைந்ததேயாகும். ஜர்மனியில், பாங்கிகள் பழையபடி லேவாதேவிகள் செய்துகொண்டிருக்கின்றன.

o o o

1914-15-ம் வருஷத்தில் நடைபெற்ற ஒரு சதியாலோசனை வழக்கில் போலீசாருக்கு உளவாளியாயிருந்த சர்தார் கிர்பால்சிங் என்பார் பஞ்சாபிலுள்ள அவருடைய கிராமத்தில் நான்கைந்து பேரால் கொலை செய்யப்பட்டனர். கொலைஞர் அகப்படவில்லை.

o o o

கல்கத்தாவில் புஸ்தக வியாபாரம் செய்துகொண்டிருந்த போலோநாத் சென் என்பவரையும் வேறு இருவரையும் கொலைசெய்தனர் என்று குற்றஞ் சாட்டப்பட்டு விசாரிக்கப்பட்ட அப்துல்லாகான், அமீர் அகமத் ஆகிய இருவரும் கல்கத்தா ஹைகோர்ட் செஷன்சில் மரண தண்டனை விதிக்கப்பட்டனர்.

o o o

பர்ஹாம்பூர் நகரில் இரவில் களவு முதலியன நடைபெறுவதால், இரவில் வீதிகளில் செல்வோர் ஒரு விளக்கு எடுத்துச் செல்ல வேண்டுமென்று அவ்வூர் நகரசபைத் தலைவர் உத்தரவிட்டிருந்தார். இதை மீறி, விளக்கின்றி, இரவில் சென்ற பதினொன்கு பேரைப் போலீசார் கைது செய்திருக்கின்றனர்.

o o o

ஜாம் நகர் சமஸ்தானத்திலுள்ள அரசியற் கைதிகளை விடுதலை செய்யும் பொருட்டு, அங்குச் சத்தியாக்கிரகம் தொடங்கப்படுமென்றும், அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்படாத வரை ஜாம் நகர் துறைமுகம் பகிஷ்கரிக்கப் படவேண்டுமென்ற ஒரு யோசனை இருக்கிறதென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

o o o

லாகூர் நகரபரிபாலன சபையின் சார்பாகச் சமீபத்தில் நடைபெறப் போகும் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்கள் நிறுத்தப்படலாமா கூடாதா வென்பதைப்பற்றி லாகூர் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியில் 16-7-31ல் ஒரு பலத்த வாதம் நடைபெற்றது. கடைசியில், காங்கிரஸ் கமிட்டியார், தங்கள் அபேட்சகர்களை நிறுத்தக்கூடாதென்று தீர்மானித்தனர்.

o o o

வரிகொடா இயக்கத்தைப்பற்றிப் பிரசாரஞ் செய்துகொண்டிருந்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்ட கிருஷ்ணலால் அஸாத் என்பார் 16-7-31-ல் டெல்லிக்கு இருபது மைல் தூரத்திலுள்ள போனா என்ற கிராமத்தில் போலீசாரால் கைது செய்யப்பட்டார். இவர் டெல்லி அடிஷனல் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டு 500 ரூபா ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டார்.

## கலம்பகம்

o o o

ராய்பேரெலி ஜில்லாவிலுள்ள முஸ்தபாபாத் போலீஸ் வட்டத்தைச் சேர்ந்த ஒரு ரெவினியு அதிகாரி. கிஸ்தி பாக்கிக்காகச் சொத்தை ஜப்தி செய்ய முயற்சித்தபோது ஒரு சிலரால் பலமாகத் தாக்கப்பட்டார். இவரை மீட்பதற்காக ஒரு போலீஸ் படை சென்றது. இப் படையையும் ஜனங்கள் பலமாகத் தாக்கினர். இதனால் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேரிட்டது. இதனால் இருவர் உயிர் துறந்தனர்.

o o o

தார்வார் ஜில்லாவிலுள்ள சாவனூர் சமஸ்தானத்திற்கு ஸ்ரீமான் மல்காஜி திருமலை என்னும் ஒரு ஜவுளி வியாபாரி காந்திகுல்லாய் தரித்துக்கொண்டு சென்றார். ஆனால் இவர் அக்குல்லாய் தரித்துக்கொண்டு சமஸ்தான எல்லைக்குள் வரக் கூடாதென்று அச்சமஸ்தானத்து அதிகாரிகள் எச்சரிக்கை செய்தார்கள். இவர் மறுக்க, உடனே சமஸ்தான எல்லையை விட்டுப் போகும்படி செய்யப்பட்டாராம்.

o o o

17-4-31ல் சான்பூரில் ஹிந்துக்களின் ரதயாத்ரா ஊர்வலம் மிக அமைதியாக நடைபெற்றது. ஜில்லா கலெக்டர், இந்த ஊர்வலம் எங்ஙனம் நடைபெற வேண்டுமென்பதைப்பற்றி இரண்டு அறிக்கைகள் வெளியிட்டிருந்தார். இதனால் ஊர்வலம் ஒழுங்காகவும், பலருடைய ஒத்துழைப்புடனும் நடைபெற்றது. போலீசாருடன் காங்கிரஸ் தொண்டர்கள் கலந்து தொண்டாற்றி வந்தது பெரிதும் பாராட்டத்தக்கதாயிருந்தது.

o o o

தேசமெங்கும் வியாபார மந்தம் அதிகமாயிருப்பதால், தாங்கள் செலுத்தும் குடிக்கூலியில் சிறிதளவு குறைக்கவேண்டுமென்று பிஷாவரிலுள்ள கடைக்காரர்கள் 16-7-31-ல் இரண்டுமணி நேரம் வேலைநிறுத்தம் செய்தார்கள். அச்சமயத்தில் இவர்கள் ஒரு கூட்டம் போட்டு, யாராவது ஒருவர் ஒரு கடையைக் காலிசெய்தால், வேறெவரும் அதே வாடகையில் அந்தக் கடையை எடுத்துக்கொள்ளக் கூடாதென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

o o o

இரங்கூன் நகரபரிபாலன சபையில் தங்களுக்கென்று தனியான இரண்டு ஸ்தானங்கள் அளிக்கப்பட வேண்டுமென்று, சில ஐரோப்பியர்கள் பர்மா அரசாங்கத்தாருக்கு விண்ணப்பம் செய்துகொண்டனர். இதைப்பற்றி இரங்கூன் நகரபரிபாலன சபையின் வரவு செலவு கமிட்டியார் ஆலோசனை செய்தது. ஐரோப்பியர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்தனர். நகர சபையினரும் இதனை அங்கீகரித்தனர்.

o o o

பம்பாயில் மிகுந்த மழையாயிருந்தும் கள்ளுக்கடை மறியல் வேலை மிக மும்முரமாக நடைபெறுகிறது. இதில் இளைஞர்களும் ஸ்திரீகளும் மிக உற்சாகத்துடன் கலந்துகொண்டிருக்கிறார்கள். சென்னையில் சூளை, இராயபுரம் முதலிய இடங்களில், காங்கிரஸ் தொண்டர்கள் மிக அமைதியாக மறியல் செய்து வருகிறார்கள். ஜனங்களுக்குள் மிகுந்த உற்சாகம் காணப்படுகிறது. வெளியூர்களிலும் மறியல் வேலை உற்சாகத்துடன் நடைபெறுகிறது.

o o o

நிதார் பாவா என்ற ஒருமாது, சமீபத்தில் ஹௌரா டிப்டி மாஜிஸ்ட்ரேட்டினால் பன்னிரண்டு மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டாள். இவள் இதற்கு முன்னர் பதின்மூன்று முறை தண்டனை விதிக்கப்பட்டு மொத்தம் பதினைந்து வருஷம் சிறை வாசத்தை அநுபவித்திருக்கிறாள். இவளுக்கு இப்பொழுது வயது 65. சிறைவாசத்தில் இவ்வளவு அநுபவமுள்ள ஒரு ஸ்திரீயைத் தாம் இதற்கு முன்னர் பார்த்ததில்லையென்று கிரவுன் பிராஸிகியூடர் வழக்கின்போது கூறினார்.

o o o

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைச் சேர்ந்த நவஜவான் பாரதசபையின் ஒன்பது அங்கத்தினர்கள், 144-வது பிரிவுக்கு விரோதமாக ஓர் ஊர்வலத்தை நடத்திச் சென்றதற்காக, பிஷாவர் நகர மாஜிஸ்ட்ரேட்டினால் 16-7-31-ல் இரண்டு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்கள். வேறொருவர் ஆறுமாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். ஆனால் இவர் உடம்பு அசௌகரியமாயிருக்கிறார் என்ற காரணத்திற்காக விடுதலை செய்யும்படி உத்திரவு செய்யப்பட்டார்.

o o o

பண்ருட்டி சப் மாஜிஸ்ட்ரேட்டினால் ஒரு வருஷம் நான்கு மாசம் தண்டனை விதிக்கப்பட்ட முகம்மது உசேன் என்ற ஒரு கைதி, கடலூர் ஜில்லா சிறைச்சாலைக்குக் கொண்டு வரப்படுவதற்காக இரண்டு கான்ஸ்டேபிள்களால் ஒரு பாசஞ்சர் வண்டியில் அழைத்துக்கொண்டுவரப்பட்டார். வண்டி, வரகால்பட்டுக்கும் கூடலூருக்கும் இடையே வந்துகொண்டிருந்தபோது, கடிவம் வாராலதியபண்டை, கைதி திடீரென்று குதித்து விட்டார். இவர்கையில் விலங்குகள் போடப்பட்டிருந்தன. உடனே இவர் இறந்துபோய்விட்டார்.

o o o

கள்ளுக்கடை மறியல் செய்வோர், கள்ளுக்கடைக்கு நூறு கஜத்திற்கு அப்பாலிருந்தே மறியல் செய்ய வேண்டுமென்று சென்னை மாகாண அதிகாரிகள் உத்திரவு செய்திருக்கிறார்களென்றும் இதனால் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள திருக்கருகாவூரில் போலீஸார், தொண்டர்களைக் கள்ளுக்கடைக்கு நூறு கஜத்திற்கு அப்பாலேயே இருக்கவேண்டுமென்று தடுக்கிறார்களென்றும், இதைப்பற்றி ஸ்ரீமான் வி. பக்தவத்ஸலு ஐயர் மகாத்மா காந்திக்குத் தந்தி கொடுத்திருக்கிறாரென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

o o o

15-7-31-ல் நடைபெற்ற லண்டன் காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில், ஸ்ரீமான் சக்லத்வாலாவை அங்கத்தினர் பதவியினின்று நீக்கவேண்டுமென்று கொண்டு வரப்பட்ட ஒரு தீர்மானம் தோல்வியடைந்தது. மகாத்மா காந்தி லண்டனுக்கு வருங்காலையில் அவரைத் தகுந்தபடி வரவேற்க ஓர் உபசாரணைக் கூட்டத்தை நியமிக்க வேண்டுமென்று கொண்டு வரப்பட்ட தீர்மானமும் தோல்வி யடைந்தது. ஆனால் சங்கத்தின் காரியதரிசி, தமது சொந்த ஹோதாவில், லண்டனுக்குவரும் காங்கிரஸ் பிரதிநிதிகளை வரவேற்கலாமென்று தீர்மானிக்கப்பட்டது.

o o o

சென்னைக் கலெக்டர் ஸ்ரீமான் எ. ஆர் காக்ஸ், சென்றவாரம் பட்டதாரிகளுக்குச் சன்னதுகள் வழங்கும்போது, காங்கிரஸ் தொண்டர்கள் மறியல் செய்வதைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். "மறியலினால் கஷ்டப்படுவோர், எத்தனை நாள் இந்த அமைதியான மறியலைப் பார்த்துக்கொண்டிருக்கப் போகின்றனர்" என்றும் "அவரவருடைய விருப்பப்படி செய்ய அவரவருக்கு உரிமையுண்டு, இந்த உரிமையில் தலையிட்டால், தலையிட்டவர் மீது தங்கள் கோபத்தைக் காட்டிவிடலாம்" என்றும் பேசி யிருக்கிறார். இவருடைய பேச்சைக் கண்டித்துச் சிலர் பத்திரிகைகளில் எழுதி யிருக்கிறார்கள்.

o o o

ஸ்ரீமதி சரஸ்வதிபாய் என்ற பதினொன்கு வயதுடைய ஒரு பெண்ணை பலாத்காரம் செய்துகொண்டுபோய்விட்டதாகப் பதினேழு வயதுள்ள ஓர் இளைஞன்மீது, பம்பாய் நான்காவது பிரசிடென்சி மாஜிஸ்ட்ரேட் முன்னர் ஒரு வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. இந்த வழக்கைத் தொடுத்தவர் மேற்படி பெண்ணின் தகப்பனாகிய விதல்தாஸ் கோபாய் என்ற ஒரு நகை வியாபாரி. வழக்கு விசாரணைக்கு வந்தபோது, சரஸ்வதிபாய், தான் அந்த இளைஞனைக் காதலித்து வருவதாகவும், அவனை விவாகம் செய்துகொள்ளத் தான் விரும்பியும், தன் தகப்பனார் அதற்கு இடங் கொடுக்கவில்லை யென்றும், அதனாலேயே அவனுடன் தான் ஓடிப்போய்விட்டதாகவும் கூறினாள்.

o o o

காஷ்மீர் சமஸ்தானத்திலுள்ள ஸ்ரீ நகரில் தொடங்கிய ஹிந்து-முஸ்லிம் கலவரம் இப்பொழுது ஒருவாறு அடங்கியிருக்கிறது. இராணுவப் படைகள் ஆங்காங்கு காவல் புரிந்து வருகின்றன. கலகத்திற்குக் காரணமென்ன வென்பதைப்பற்றி விசாரிக்க சமஸ்தானத்தார் ஒரு கமிட்டியை நியமித்திருக்கின்றனர். வியாபார ஸ்தலங்களும் மெது மெதுவாகத் திறக்கப்பட்டு வருகின்றன. 15-7-31-ல் சில சிப்பாய்களுக்கும், கலகக்காரர் சிலருக்கும் ஒரு சண்டை உண்டாயிற்று. சிப்பாய்களின் துப்பாக்கியைக் கலகக்காரர் பிடுங்கமுயன்றனர். உடனே சிப்பாய்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டியதாயிற்று. இதனால் ஒருவர் கொல்லப்பட்டார்; இருவர் காயமடைந்தனர்.

o o o

டெல்லி ஒப்பந்தப்படி பீஹார்-ஒரிஸா மாகாண அரசாங்கத்தார் எவ்வாறு நடந்து கொண்டனர் என்பதைப்பற்றி, மேற்படி மாகாண காங்கிரஸ் தலைவராகிய பாபு இராஜேந்திர பிரசாத் என்பார், அரசாங்கப் பிரதம காரியதரிசியுடன் 16-7-31ல் ராஞ்சியில் நெடு நேரம் பேசிக்கொண்டிருந்தார். பின்னர் கவர்னருடன் சுமார் ஒன்றரை மணி நேரம் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது பிரதம காரியதரிசியும் பிரசன்னமாயிருந்தார். பிறகு விவரமாகப் பதில் எழுதுவதாகக் கவர்னர் தெரிவித்தார்.

o o o

சென்னை எழும்பூர் கமாண்டர்-இன்-சீப் ரோட்டிலுள்ள ஜனாப் மகமத்கான் ஷிராஸி என்பவருடைய வீட்டில், கணபதி நாய்க்கர், பொன்னுசாமி நாய்க்கர், ஆறுமுக நாய்க்கர் என்ற மூவர் மரமறுக்கும் வேலையைச் செய்துகொண்டிருந்தனர். ஜனாப் ஷிராஸி 2-7-31-ல், தமது பங்களாவிலேயே 1050 ரூபா பெறுமானமுள்ள கரன்சி நோட்டுகளைத் தொலைத்துவிட்டார். இந்த நோட்டுகளை மேற்கண்ட மூவரும் கண்டெடுத்துத் தங்களுக்குள்ளேயே வைத்துக் கொண்டார்கள். இவர்களில் பொன்னுசாமி நாய்க்கர் அதிக பங்கெடுத்துக்கொண்டு, செங்கற்பட்டுக்கருகாமையிலுள்ள ஒரு கிராமத்தில் 600 ரூபா பெறுமான ஒரு நிலத்தை வாங்கிவிட்டார். மற்ற இருவரும், தங்களுக்குக்கிடைத்த பணத்தைக்கொண்டு நகைகள் வாங்கி விட்டனர். ஜனாப் ஷிராஸி, தமது பங்களாவில் களவுபோன விஷயத்தைப்பற்றிப் போலீசாருக்குத்தெரிவிக்க, போலீசார்புலன் விசாரித்து மேற்கண்ட மூவரையும் கைது செய்தனர்.

o o o

பிரசோற்பத்தி ஆண்டு ஆனித்திங்கள் இருபத்தோராம் நாள் (5-7-31) காலை S. சொக்கநாதபுரம் கணமுத்து விலாஸ் பங்களாவில் திருவாளர் கரு. அருணசலச் செட்டியார் தலைமையின்கீழ் திரு. S. சொக்கலிங்கச் செட்டியாரால் விவேகாநந்த வாசகசாலை திறந்து வைக்கப்பெற்றது. உபாத்தியாயர் A. R. அய்யர் ஊக்கமது கைவிடேல் என்பது பற்றியும், S. சொ. அவர்கள் வாசகசாலை அவசியம் என்பது பற்றியும், தலைவரவர்கள் வாசகசாலையில் இளைஞர்கள் விடாமுயற்சி என்பது பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். 12-7-31ல் மேற்படி வாசகசாலை அங்கத்தினர்களடங்கிய ஒரு கூட்டம் கூடிற்று. அதில் திருவாளர்களான சி. சுப. சுப்பிரமணியச் செட்டியாரைக் காரியதரிசியாகவும் மு. ஆத். இராமசாமிச் செட்டியாரை உப காரியதரிசியாகவும் சுப கநேசச் செட்டியாரை பொக்கிஷதாரராகவும் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அவ்வமயம் அறிஞர் பலர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

கராச்சியில் வெளியாகும் "ஹிந்து ஜாதி" என்ற ஒரு தினசரி தேசபாஷா பத்திரிகையின் நிருவாகஸ்தராயிருந்த சுவாமி சிவானந்தர் என்ற ஒரு சந்நியாசி, தமது சந்நியாசி உடையைக் களைந்து விட்டு, உலக வாழ்க்கைக்குத் திரும்பி விட்டார். இவர் தூய வெண் கதராடை அணிந்து, பழையபடி பூணூல் போட்டுக்கொண்டார். இவர் தமது சந்நியாச உடைகளை, ஏழைகளுக்கு தானஞ் செய்து விட்டார். இதேமாதிரி, கராச்சி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினருமான ஸ்வாமி கிருஷ்ணனந்தர், பதினெட்டு வருஷம் சந்நியாசியாக இருந்து, இப்பொழுது மீண்டும் உலக வாழ்க்கையில் திரும்பி விட்டார். இவர், குழந்தையாயிருந்த போது வீட்டிலிருந்து ஓடி வந்து விட்டாராம். இப்பொழுது, இவருடைய தாயாருக்குத் தமது மகன் சந்நியாசியாயிருக்கிற விஷயம் தெரிந்து பஞ்சாபிலிருந்து ஓடிவந்து தமது மகனைத் தம்மோடு வந்து உலக வாழ்க்கையிலீடுபட்டிருக்கும்படி கேட்டுக் கொண்டார். தாயன்புக்கு, ஸ்வாமி கிருஷ்ணனந்தர் இணங்கி விட்டார்!





## இலக்கியப் பூங்காவனம்

(ஸ்ரீமான் சோமசுந்தர தேசிகர்)

செய்யுள் செய்தலில் வல்ல கவிவாணர் தம் கவித்திறத்தைப் பல விதத்திலுங் காட்டுவர். சிலர் செம்பாகமாகப் பாடுவர்; சிலர் அரிய கற்பனைகளடங்கப் பாடுவர்; சிலர் துள்ளலோசை மிகவும் சந்தங்கள் இனிமை யூட்டவும் பாடுவர். அப்படிப்பட்ட பாக்களிற் சிலவற்றை ஈண்டுக் குறிப்பாம்.

### திருவொற்றியூர்ப் புராணம்

#### ஆற்று வரவு

அன்னமாகிரி தன்னின்மாநதி
யாயகனவ ருன்னியே
மன்னியானைக டன்னையேறென
வாய்க்கவே யுறவீக்கியே
கன்னியேய்புவி தன்னியேமணி
கம்பமாவுழ வாக்கியே
நன்னரைவனம் வித்தியேவிளை
வெய்தவேலனை நாடுவார். 1

இருவிக்குருவி வெருவக்குறிஞ்சி
யிலகுகுடிலை யெற்றிடா
வருவிப்புனலைப் பருகிப்பாலு
மானமேக நீருடன்
மருவிப்பாலைத் திணையைப்பெரிய
மறவர்மனையைச் சாடியே
பரவிக்காளி பதத்தைச்சூழ்ந்து
பாலைத்தருவை நூறியே. 2

உரத்திற்றிருவைப் பரித்தமாய
னுபயபாத முன்னியே
தரத்திற்றொறுவைச் சினத்துமானைத்
தொடருங்கலையைத் தாவியே
நிரைத்தவாய ரகத்தைச்சாடி
நிலவிச்சுழியிற் குலவியால
முரித்துப்பாரின் முல்லைநிலத்தை
மூடிமருத முந்தியே. 3

சந்தபூக சண்பகாதி
தாழைவாழை காரகில்
உந்துபாடல் பலவருத
மோங்குவெள்ளில் மாதவிப்
பந்தர்நூறி மகபதியைப்
பரவியலையும் வீசியே
கந்துவாளை சேல்களாதி
நாடியாளைப் பாயவே. 4

அல்லிமுளரி குமுதநெய்த
லாம்பல்குளிரி குவளையும்
இல்லமென்ன நிறையும்வாவி
யினியகூவன் மீதுசென்
றுல்லைஞாழல் கைதைபுன்னை
யுடனியாது மொழிவரு
நல்லவருண நெய்தலூடு
நாடிவாரி நணுகியே. 5

#### வேறு

சீலமா யன்று தொட்டுச்
சிறந்தபால் பாலியாறுய்க்
கோலமார் புவியிற் சாரக்
கோவியே தொண்டை நாட்டிற்
சாலவே மன்ன ரெல்லாம்
வயலுக டோறுந் தங்கி
யேலவே வரம்பு கட்டி
யுளங்களித் தின்ப மார்வார். 6

இதன் பொருளாவது, பெருமைபொருந்திய பர்வதத்தில் மகாநதியாகப் பெருகிவர அங்கிருக்கும் வேடர்கள் கண்டு அங்கு சஞ்சரிக்கும் யானைகளைக் கடாக்கள் போலப் பொருந்தும்படி உறுதியாய்க்கட்டி அழிவில்லாத தன்மை பொருந்திய பூமியினிடத்து வந்து அழகுடன் அசைந்துகொண்டேயிருக்குந் தன்மையை யியல்பாகவுடையனவாகிய அந்த யானைகளால் உழுதலைச் செய்து நன்மையாகிய மலை நெற்களை விதைத்து அவை விளையுமாறு முருகக்கடவுளைத் துதிப்பர். தினைப்புலத்தில் குருவிகளெல்லாம் அஞ்சும்படி, குறிஞ்சி நிலத்திலே விளங்குங் குடிசைகளையெல்லாம்பறித்துக்கொண்டும், அம்மலையருவி நீரையுட்கொண்டும், அப்பால் வெள்ளம் அங்கு பெய்வதாகிய மேகசலத்துடனே கலந்தும், பாலை நிலத்தை யடைந்தும் வேடர்களுடைய வீடுகளையும் சாட்டிக்கொண்டு பரந்தும் காளியம்மையின் பாதத்தைத் துதி செய்தும் பாலைமரங்களை முறித்துக்கொண்டும்; மார்பினிடத்திலே இலக்குமியைத் தாங்கிய திருமாலினது இரண்டு திருவடிகளைத் தியானித்தும், பசுக்களைத் தாத்தியும், மான்களைக்கோபித்தும், ஒன்றன்பின்னொன்றாகத் தொடர்ந்து செல்லா நின்ற கலைமான்களிருக்குமிடத்திற் சார்ந்தும், வரிசையாயிராநின்ற முல்லை நிலமாக்களுடைய வீடுகளை யிழுத்துக் கொண்டும், பாலினாலே முல்லை நிலத்தை மறைத்தும், அந்த நிலத்தைவிட்டு நீங்கி மருதநிலத்திற் சேர்ந்தது. சந்தனம் கமுகு சண்பகம் முதலாகத் தென்னைமரங்கள் வாழைமரங்கள் கருமையாகிய அகில் மரங்கள் அசையாநின்ற பாதிரிமரங்கள், பலாமரங்கள் மாமரங்கள் ஓங்கியிருக்கின்ற விளாமரங்கள் குருக்கத்தி மரங்களாகிய பந்தல் என்னும் இவைகளை முறித்துக்கொண்டும் மருத நிலக்கடவுளாகிய தேவேந்திரனைத் துதித்தும் அலைகளையும் வீசிக்கொண்டு பெரிய வாளைமீன்களும் சேல் மீன்களும் நாடியாள்களைப்பாயும். அகவிதழையுடைய தாமரையும் வெள்ளாம்பலும் நெய்தலும் செவ்வாம்பலும் குளிரியும் நீலோற்பலமும் ஆகிய இவைதங்களுக்கு இருப்பிடமாக நிறைந்திருக்கின்ற தடாகங்களிலும் இனியநீருள்ள கிணறுகளிடத்திலுந் தவழ்ந்தது மருதநிலத்தைவிட்டுப்போய் விரைவாகக்குங்குமமரமும் தாழையும் புன்னையுமாகிய இவைகளோடே ஒன்றையும் தப்பவிடாமல் நன்மையுள்ள வருண தேவனைத்தியானித்து செய்த நிலத்திற் சென்று சமுத்திரத்தோடு கலந்து புனிதமுள்ளதாய் அக்காலந் தொடங்கிச் சிறப்புற்ற பாலாறாது பாலிநதியா யழகுபொருந்திய உலகத்திற் பெருகாநிற்க, அணைவகுத்துத் தொண்டை நாட்டில் இருக்கின்ற உழவர்களெல்லாம் நீதியாகவே வயல்கடோறுந்தங்கியிருந்து பொருந்தும்படி வரப்பது செய்து மனமகிழ்ந்து இன்பமடைவார்கள்.

---

சென்ற திங்கட்கிழமை யன்று கல்கத்தா டால் ஹௌஸி வட்டத்தில் ஒரு விநோதமான பகற்கொள்ளை நடைபெற்றது. வயோதிகப் பருவமுடைய ஒரு வக்கீல் ஒரு டிராம் வண்டியில் ஏறப்போனார். அப்பொழுது மூன்று நான்குபேர் அவரைச் சூழ்ந்து கொண்டனர். ஒருவன், பேனாக்கத்தியால் அவர் சட்டைப்பையை அறுத்து அதிலிருந்து 3600 ரூபா பெறுமான நோட்டுகளை எடுத்துக் கொண்டான். ஆனால், வக்கீல், சாமர்த்தியமாக இரண்டாயிரம் ரூபா பெறுமான நோட்டுகளைத் திரும்பிப் பிடுங்கிக்கொண்டார். இதற்குள், கள்வர் தலைமறைத்து விட்டனர். அவர்கள் இன்னும் அகப்படவில்லை.

# கந்தர் அநுபூதி

## மறைபொருள் விளக்க உரை

சென்னை, இராயப்பேட்டை 'வேத ப்ரவசன மந்திரத்து' ஸ்ரீமத் சிவத்தி யானந்த மஹரிஷி எழுதியது :—

### கடவுள் முன் கோபமாற்ற

இல்லே யெனுமாயையி லிட்டனைநீ
பொல்லே னறியாமை பொறுத்திலையே,
மல்லேபுரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையும் சுடர்வேலவனே! 29

### அந்வயம்

மல் (ஏ) புரி பன்னிரு வாகுவில் என் சொல் (ஏ) புனையும் சுடர் வேலவனே! நீ இல் (ஏ) எனும் மாயையில் (என்னை) இட்டனை; பொல்லேன் அறியாமை பொறுத்திலை (ஏ). [(ஏ) நான்கனையும் அசையாகக் கொள்க.]

### பொழிப்புரை

தலைப்பு :—மனமும் வாக்கும் இறந்து நின்றார் திருமுன்னர் உபாஸகன் நின்று அவருக்குத் தன் மீது ஏற்பட்டுள்ள கோபத்தை மாற்றிக்கொள்ள.

செய்யுள் :—வன்மைக்குரிய அருஞ்செய்கைகளைச் செய்யும் பன்னிரண்டு புஜங்களிலும் எனது சொல்லாலான மாலைகளைத் தரிக்கும் காந்திவாய்ந்த வேலாயுதக் கடவுளே! குடும்பவாழ்க்கையாகிய மாயாமயக்கத்தில் ஆழ என்னை நீ வைத்தனை; (அவ்வகைச் செய்த பின்னர் யான் பலவித பொல்லாச் செயல்களை டும் புரியவேண்டி வந்தது. இப்பரிவுக்கு என் அறியாமையே காரணம். அப்படியிருக்கும், அம்மாயை மயக்கில் நின்ற) பொல்லானய் யான் செய்யும் அறியாமைச் செயல்களைப் பொறுக்க மாட்டேனென்கிறாய்! (அல்லது பொறுத்து அச்செயல்களுக்கேற்படும் அப்பயனை யான் உண்ணாது தடுக்கமாட்டே னென்கிறாய்! இது நீதியாகுமா? என்றபடி).

### விசேஷக் குறிப்புகள்

இச்செய்யுள் அருணகிரிவாக்கோவென்று ஐயுறுவர் சிலர். இது கந்தரநுபூதியை நூருக்க முயன்றவராது இடைச்செருகலென்னலாம்படியுள்ள தென்பர். இவ்வகை இடைச்செருகினவர் முருகோபாஸனையில் நின்ற கிருஹஸ்தரென்பதே அவனுர் துணிபு. இல்லையெனில் அருணகிரிநாதர் தம்மை ஒரு கிருஹஸ்தனது நிலைமையில் உடம்படுத்திக்கொண்டு பாடின செய்யுளாகக் கொள்ளல்வேண்டும். உரைகாரர்கள் 'இல்லே யெனுமாயையி லிட்டனை' யென்பதற்குக் கூறிய உரை பொருந்தாதெனவே கொள்ள வேண்டியுள்ளது. இல்லென்பது இல்லம், மனை, வீடெனப் பொருள்படுவது. இவ் வீடு எனப்படுவது மோட்சமாகிய விடுதலையைக் குறிக்கும் வீட்டுக்குப் பிரதிநிதியாக மாத்திரம் உலகில் உணரப்பட நிற்பது. இடும்பைக்கு இடும்பையாக இயல் உடம்பு இதனைப் பொய்யின் கொள்கலமெனக் கொள்ளவேண்டியிருக்க அதனை மெய்யென்று கூறிவைத்தது போல், விட்டு நீங்கவேண்டிய கிருஹத்தை வீடு என்னும் சுகப்பயன்தரும் இடமாக எண்ணி நிலைபெற வசிக்கும் தலமாகக் கொண்டனர் உலகோர். மாயையின் பல பொருண்மைகளில் ஒன்று, ஒன்றை மற்றொன்றாக உணர்ந்து ஒழுகுவதாகும். மோட்சம் அல்லது நித்திய வாழ்வைத்தரும் வீடு சதா நமக்கு ஞாபகமிருக்குமாறு இவ்வுலகிடைவைத்த வீடு அல்லது இல்லமானது நாம் வீட்டின்பமாகிய பேரின்பத்தை யடையும் நெறியில் நடப்பதற்குச் சாதகமாக ஏற்பட்ட இடம் என்பதனை மறந்து, அறியாமையினால் நாம் மனையும், அம்மனைக்கு விளக்கமாகிய மடவாளும், அம்மடவாளுக்கு விளக்கமாகிய புதல்வரும், அவரைக் காப்பாற்றவான் வேண்டிய உலகப்பொருளும்தேடத் தொடங்கி, குருநாதனையும் அவன்றரும் மோட்ச நிலையையும் மறந்து திண்டாடுகிறோம். இது மாயையின் செயலன்றி வேறென்ன? இம்மாயையாகிய இல்லறவாழ்வு யாரால் வந்தது? இறைவனது திருவுள்ளப்படியன்றி நமது வினையின் பயனாகவே வந்ததெனக் கொள்வோம். அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் நிலையில் அவன் திருவுள்ளமன்றி நமக்கென வினையும் அதன் பயனும் அவ்வினையை நாம் அவனையின்றி அநுபவித்தலும் தனிப்பட வில்லையானது பற்றி இல்லெனும் இம்மாயையும், இம்மாயைக்கு ஆதாரமான அறியாமையும் அவ்வறியாமையான் வரும் இன்ப துன்பங்களும் ஆகிய வெல்லாம் அவனேயாம் என்பதனை அருளுணர்த்த உணர்ந்து, அவ்வுணர்ச்சிகொண்டு அவன் முன்னிலையிலே நின்று, கமது பிரத்யக் பாவனையால் அவனுக்கு ஏற்பட்ட கோபத்தை மாற்றிக்கொள்ள இம்மறை எதுவாதலை உய்த்துணர்ந்து கொள்க. பன்னிருவாகு வென்பதும், ஆறுமுக மென்பதற்கிணங்கச், சிலரை மயக்கச்செய்யும் சொற்றொடர் ஆகும். போராற்றலுள்ள ஒருவன் செய்யும் செய்கையெல்லாம் அவனது பல கரங்களாக வருணிக்கப்படுதல் கவிமரபானதுபற்றி ஈண்டு ஆறுமுகத்தினுற் குறிப்பிட்ட உருவத்துக்கேற்பப்பன்னிரண்டு வாகுக்களையும் கூறினர். அவ்வருஞ்செயல்களைப்பற்றி,

"விண் செலல் மரபின் ஐயர்க்கேந்திய
உக்கஞ் சேர்த்திய தொருகை, [தொருகை,
கலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை
அசைஇய தொருகை,
அங்குசங் கடாவ ஒருகை, இருகை
ஐயிருவட்டமொடு எஃகு வலந்திரிப்ப,
ஒருகை மார்பொடு விளங்க,
ஒருகை தாரொடு பொலிய,
ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைச் சொட்ப,
ஒருகை
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய,
ஒருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட,
ஆங்கு, அப்
பன்னிருகையும் பாற்படவியற்றி"

திருமுருகாற்றுப்படை.

என்றார் நக்கீரரும். இந்நூலாசிரியர் புயவகுப்பு முதலிய வகுப்புகளால் முருகனது வாகுக்களில் சொன்மாலை புனைந்தணிய விட்டுள்ளது உலகமறிந்த விஷயமாகும். இம்மறை அருணகிரி வாக்கல்ல என்னும் பட்சத்திற் 'சொல்லே புனையும்' என்பது பொருத்தமாயிருக்குமாறு இம்மறை புனையப் பெற்றுள்ளதென்ப. மந்திர சாஸ்திர சித்தி பெற்ற பெரியாரிடத்து ஏனையோர் சென்று தங்களுடைய வாழ்க்கை சுகப்படுவதற்கான மந்திரங்களை அல்லது மறைகளைக் கேட்டு வாங்கி உபாஸித்து விருத்தி யடைந்து தங்கள் வாழ்க்கையைச் சிறப்பினதாகச்செய்துகொள்வது உலகவழக்கு. அதுபோலத் தம்மாட்டு வந்து கேட்ட ஒரு கிருஹஸ்தருக்கு எழுதிக்கொடுத்து ஜபிக்கச் சொன்ன மறைகளில் இதுவும் ஒன்றாக இருத்தல் கூடும். பின்னர் அதனைத் தமது அநுபூதி நூலிற்கூட்டி எழுதிவைத்திருத்தலும் கூடும் என்பதையும் கவனிப்பார்களாக. உபாஸகனது மனச்சாந்தியே உபாஸ்யமாகிய மூர்த்தியின் கோப சாந்தியானது பற்றியும், அவ்வுபாஸகன் காரியாகார்ய விவேசனத்தால் தனது அறியாமையினின்று நீங்கவே, தனது உபாஸனமூர்த்திக்குக் கோப நீங்கினதாக எண்ணுவது உபாஸகர்கள் கண்ட வுண்மையானது பற்றியும், தனக்கு அறிவு வளர்ந்ததும் தனதுபூர்வ அறியாமையை யுணர்ந்து அதற்காகப் பச்சாத்தாபப்பட்ட அக்கணமே எதிர்தோற்றும் தெய்வத்தின் கோபமாறினதாகக் கருத்துட்டோன்றுமாறு, 'கடவுள் முன்கோபமாற்ற' என்ற தலைப்பிட்டார்.

# குடும்பத்தைப் பாதுகாப்பதெப்படி?

## பெண்களுக்குள் ஒரு சம்பாஷணை

(சிவகாமு அம்மாள் - வயது 65; உபாத்தியாயரின் மனைவி; லக்ஷிமி அம்மாள்—50 வயது; அரசாங்க உதவிக் காரியதரிசியின் மனைவி; லலிதா - வயது 37—பாங்கி மானேஜரின் மனைவி. சாரதா-வயது 30—வக்கீலின் மனைவி. ஆங்கிலம் கற்றவள். ஆண்டாளம்மாள்-வயது 22; கிலஸ்வானின் மனைவி. (புருஷருக்கு குமாஸ்தா வேலை.)

லலிதா:— நம்மால் புருஷர்களுக்கு எத்தனையோ ஹிம்சைகள். மாத முதலில் சம்பளம் வருவதுதான் தாமதம். 5-ந் தேதிக்குள் முக்காற் பங்கு செலவாய் விடுகிறது- 10-ந் தேதி முதல் 'ஜாக்கிரதையாயிருக்க வேண்டியிருக்கிறது. 25-ந் தேதி ஆனதும் சாதக பக்ஷிபோல் அடுத்த முதல் தேதியை எதிர் பார்த்து நிற்கவேண்டியிருக்கிறது.

சாரதா:— மாதச் சம்பளம் வரும் உங்கள் நிலைமையைச் சொன்னீர்கள். தினசரி வருமானமுள்ள எங்கள் நிலைமையைக் கேளுங்கள். ஜவுளிக்கடை, பாத்திரக் கடை, மளிகைக் கடை முதலிய எல்லாக் கடைகளிலும் கடன். அவ்வப்போது சொற்ப சொற்பமாய்க் கொடுத்து வருகிறோம். அவர்கள் பேசாமலிருக்கிறார்களா? கேட்பன வெல்லாவற்றையும் கொடுத்தும் வருகிறார்கள். ஒரு நல்ல புத்தகத்தை விலைக்கு வாங்கி சொந்தமாய் வைத்துக் கொள்ளக்கூட பணம் இலகுவில் அகப்படுவதில்லை.

லக்ஷிமி:— எங்களுக்கு மாதம் 1,000 ரூபா வருமானம். மூத்த பிள்ளை 200 ரூபா சம்பாதிக்கிறான். எங்களுக்கு இவ்விதமாக வருவாய் வந்தும் 100 ரூபா மிகுத்தி வைக்க முடியவில்லை. பண்டிகைக்குச் சில மாதம் பணம் கட்ட தவணை தவறிப்போகிறது. தெரிந்தவர்களிடம் சில சமயம் 15,20 ரூபா கடன் வாங்கவும் நேரிடுகிறது. இவ்வளவிற்கும் 10 குழந்தைகளில்லை; பெண்களுக்கு ஒரு விசேஷ நகை யொன்றும் செய்து போடவில்லை. ஆசையாய் மாதங்களில் 4 நாட்களாவது 4 பதார்த்தங்கள்வைத்துச் சாப்பிடுவதில்லை. உயர்ந்த ஆடைகள் உடுத்துவதில்லை. எங்ககத்துக்காரர் சொக்காய் துணிகளுக்காக 50 ரூபாய்க்கு மேல் ஒரு வருஷத்திலும் செலவு செய்ததில்லை. பணம் மாயமாய் மறைகிறது.

ஆண்டாளம்மாள்:— வீட்டிற்கு வீடு வாசப்படி. மாதம் 175 ரூபாயில் எங்கள் புருஷன் பெண்சாதி 2 குழந்தைகளுக்கும் 125 ரூபா செல்கிறது. பள்ளிக்கூடச் சம்பளமில்லை. என்னைப் பாருங்கள். 3 வருஷங்களாய்ப் பிரயத்தனஞ் செய்து இப்போதே ஒரு ஜதை வைரத்தோடும் ஒருவைர பேஸரியும் போட்டிருக்கிறேன். பணம் ஓடாய் செலவழிகிறது.எதைக்குறைக்கிறது? மாதம் 2 முறை ஸினிமா பார்ப்பதென்றாலும், பாட்டுக்கச்சேரிக்குப் போகவேண்டுமென்றாலும் முன்பின் பார்த்தே செலவு செய்யவேண்டியிருக்கிறது. எங்கள் எஜமானர் இவ்வளவிற்கும் மிகச் செட்டு - காபி ஹோட்டலில் விசேஷமாய்ச் செலவு செய்வதில்லை. ஆனால் செய்கிறதை நன்றாய்ச் செய்யவேண்டும்.

சிவகாமு:—நீங்கள் இக்காலத்துப் பெண்கள். நான் குழந்தையாயிருந்தபோது காலணாவிடைப்பது குதிரைக்கொம்பாயிருந்தது. தெருவில் வந்ததைவாங்கிக்கொடுஎன்று நான்கேட்டால் "போ, போ" என்பார்கள். எங்கள் எஜமானருக்கு 30 ரூபா மாதச்சம்பளம். இதைக் கொண்டு படிக்கக் கடன் கொடுத்தவருக்கு 6 மாதத்திற்கு ஒரு முறைவட்டியும் முதலில் கொஞ்சமும் கொடுக்கவேண்டும். என் மைத்துனர்களுக்கும் பள்ளிக்கூடப் படிப்பிற்குப் பணம் அனுப்பவேண்டும். நாத்திமார்களுக்குச் சீர்செய்யவேண்டும். மாமியார்-மாமனாரும் கைக்குழந்தைகளுஞ் சாப்பிடவேண்டும். 4,5 கடன் வாங்கலாம்; ஆனால் உடனே கொடுத்துவிடவேண்டும். ஒரு பொருள் சிந்திவிட்டாலும், ஆசையாக ஒருகறி-பக்ஷணம் செய்துவிட்டாலும்-பெரியவர்களுக்குக்கோபம் வந்துவிடும். 5 ரூபாய்க்கு மேற்பட்ட துணிவாங்கிக் கொடுக்கமாட்டார்கள். காலிறங்கிய துண்டு கிடைத்தால் சரிகைத் துண்டுகளைப்போல் எண்ணிக்கொள்வேன். சீட்டித் துணிகளை வாங்கிக்கொடுப்பார்கள். அதிலும் மட்டத்துணியே கிடைக்கும். ஆனால் வயிறு நிறைய சாப்பிடுவோம். காய் கறி ஏராளமாய்க் கிடைக்கும். 4 மைல் 5 மைல் நடந்தே போவோம். இப்போது எல்லாம் எவ்வளவோ மாறுதல். நாளையென்ற எண்ணமில்லை. வந்ததை யெல்லாம் லக்ஷியமின்றிச் செலவிடுகின்றனர். வைரத்தோடு, பெரிய பெரிய திவான், வக்கீல், டிபுடி முதலியோர் மனைவிகள் போடுவார்கள். இப்போது எல்லோருக்கும் வைரம் போடவேண்டுமென்ற ஆசை. சாதாரண குமாஸ்தாவின் மனைவிகூட காலிறங்காத சேலை கட்டுகிறாள்; காப்பி சாப்பிடுகிறாள். பட்டணத்திற்கு நடந்துபோகவோ, டிராமில் போகவோ மனங்கிடையாது. ரிக்ஷா வைத்துச் செல்கிறார்கள். ஸினிமாவென்ன, டிராமாவென்ன, பாட்டுக் கச்சேரிகளென்ன, நாவல்களென்ன, ஸோப்பு, தைலம், சிங்காரம் பண்ணிக் கொள்ளுதல், ஜிகினாப்போட்ட பட்டு ரவிக்கை. கொஞ்சம் சிரமமாயிருப்பின் ஹோட்டலிலிருந்து சோறுகொண்டுவந்து சாப்பிடுதல். என்னென்னவோ பலவழிகளில் பணம் பறந்துபோகிறது. என் மாமியார் 65 வயதில்கூட நன்றாய்ச் சமையல் செய்வர். 150 ரூபா சம்பளமாய்விட்டால் பரிசாரகத்திற்கு ஆள் போடவேண்டியிருக்கிறது. என் எஜமானருக்கு 250 ரூபா சம்பளமாய் ஹெட்மாஸ்டர் வேலை பார்த்தபோதும் ஒரு வேலைக்காரியைத் தவிர - எல்லா வேலைகளையும் இன்றுவரை நானே செய்து வருகிறேன். 10 ரூபா செலவிட்டுப் பாத்திரம் வாங்கவேண்டுமென்றால் 100 முறை ஆலோசனை செய்வோம். நாலைந்து வருஷங்களாகவே சிறுகச்சிறுக எல்லோரையும் பார்த்து 100 ரூபாய்க்கு வெள்ளிச்சாமான்களைச் செய்துவைத்துக்கொண்டிருக்கிறோம். அக்காலத்தில் நாங்கள் ஜாக்கிரதையாய்ச்செலவு செய்து வந்ததினால் இந்த வீடு வாங்கமுடிந்தது. 2 பெண்களுக்குக் கலியாணம் - ருது சாந்தி - சீமந்தம் முதலியவை செய்யஎளிதாயிற்று. இந்த உதவாப் பிள்ளைகளையும் படிக்கவைக்க முடிந்தது. ஏதோ கொஞ்சம் கையிருப்பு வைத்துக்கொள்ளவும் முடிந்தது. அவ்விதமில்லாமல் வந்ததையெல்லாம் செலவு செய்திருப்போமானால் கிருஷ்ணார்ப்பணந் தான். இந்தஎன் குமாரர்கள் எங்களைச்சந்தியில் நிறுத்தியிருப்பார்கள். 10 வருஷங்களாய்க் காலணாவருமான மில்லாமலிருப்பதற்கு நாங்கள் சோற்றிற்கே திண்டாட வேண்டியதுதான்!

லலிதா:—அஃதென்ன மாமி அப்படிச் சொல்கிறீர்களே! உங்கள் குமாரர்கள் தெருவிலே நிறுத்தி விடுவார்களா? அவர்களென்ன ஒன்றும் தெரியாதவர்களா? ஈவு இரக்கமற்றவர்களா?

லக்ஷிமி:—காட்டுப் பெண்கள் கைகளையும், முகங்களையும் பார்த்துத்தானே நடக்க நேரிடும். அது கௌரவக் குறைவுதானே. மேலும் அவர்களின் சம்பளம் மிகக்குறைவாயிருப்பின் அவர்களென்ன செய்வார்கள்? முன் கவலையுடன் எச்சரிக்கையாய்க் காலங் கழித்தலேமேல், பிறரை நம்பிநடத்தலே இரண்டாம் பக்ஷம். நம்கையில் வயது காலத்தில் கொஞ்சமிருப்பு இருந்தால்மட்டும் நாம் சௌகரியமாயிருக்கலாம். இக்காலத்திலே பிள்ளை ஏது? பெண் ஏது? பந்துக்கள் ஏது? உண்டானால் எல்லோரும் உண்டு; எல்லாம் உண்டு. என்ன சொன்னாலும் இக்காலத்தில் மிகுத்திவைத்தல் என்பதுசாமானியமாய் முடியவில்லை. 100 ரூபா சேருமுன் ரூபா 200 ரூபாய்க்குச் செலவு நேர்ந்துவிடுகிறது. ஊரோடு நடக்கவேண்டியிருக்கிறதே. 5 வருஷங்களாகவே இவ்வைரத்தோடு போட்டுக்கொண்டிருக்கிறேன். அதற்குமுன் ஊரெல்லாம் பித்துப்பிடிக்கவிட்டார்கள். சின்னக்காரி, வட்டிக்கு ஆசைப்படுகிறாள்; இப்போதில்லாமல் எப்போது போட்டுக் கொள்ளப் போகிறாள். தலைநரைத்துக் கன்னங்களொட்டிப் போன பின்னரா?

சாரதா:—நாமென்ன அதிகச்செலவு செய்கிறோம். நல்ல காற்றும்வெளிச்சமும் தாராளமாய்ப்போய்வர இருக்கத் தக்கவசதியுள்ள வீடு வேண்டாமா? வீடென்றால் நல்ல சாமான்கள், பாத்திரம் பண்டங்கள், அழகான படங்கள், புஸ்தகங்கள், வாசிக்க எழுத சௌகரியங்கள், மற்றும் வெளியில் போய்வர ரிக்ஷாவோ, காரோ இவைகளின்றி எப்படிக் காலக்ஷேபஞ் செய்கிறது? குழந்தைகளை எடுத்துவைத்துக் கொள்ள ஓர் ஆள்வேண்டாமா? அவைகளுக்குவிளையாடும் பொம்மைகள் வேண்டாமா? வீட்டில் பரிசாரகியின்றியும், வேலைக்காரியின்றியும் என்ன வேலை நடக்கும்? சிநேகிதர்கள் வரவை எதிர்பார்த்து அவர்களை உபசரிக்கிறதா? வீட்டு வேலைகளைப் பார்க்கிறதா? வாரத்தில் இரண்டு நாட்களாவது வீட்டுக் கவலைகளை யொழித்து இரண்டுமணி நேரமாவது வெளியிற்போய் மற்றவர்களுடன்பழகவேண்டாமா? ஊரில் எத்தனையோ வேடிக்கைகள், எத்தனையோ உயர்வான நாடகங்கள் நடக்கும்போது அவைகளைக்கண்ணுறாமல்வீட்டிற்குள் அடைந்திருப்பதால் அறிவுகுன்றிப்போகாதோ? மிருகத்திற்கும் மனிதருக்கும் பேதமென்ன? வெளிநாடுகளிலே ஸ்திரீகள் பல நாடுகளுக்குச் சென்று அங்குள்ள பல விநோதங்களையும்; பலவித பழக்க வழக்கங்களையும் பார்த்து வருகின்றனர். ஊருக்குள் நடப்பதைக்கூடப் பார்க்க நாம் கொடுத்துவைக்கவில்லையா? பகவான் கொடுத்த கண் கால்களையும் நல்ல காரியங்களில் உபயோகியாவிடின் அவைகளின் பயனென்ன? பழைய காலத்தைச் சொல்லிவருவதில் இலாபமென்ன? மிகுதி வைத்தலின் பெருமையை நான் அறிவேன். ஆனால் அம்மிகுதி அதிகவாவாலேற்படவேண்டுமேயன்றிமனிதனின் வாழ்க்கைச் சுகத்தைக் குறைத்துக்கொள்வதால் ஏற்படுதல் மேன்மையன்று.

ஆண்டாள்:— என்ன சொல்லுங்கள். இக்காலத்தில் நல்ல புட்வை, ரவிக்கை-நகை - நல்ல சொக்காய், துணி, வெளிப் பார்வைக்கு கேர்த்தியாய்த் தோன்றல் இவைகள் குறைவாயின், நம்மை ஒருவரும் லக்ஷியஞ் செய்ய மாட்டார்கள் - பகட்டுக்குத்தான் இக்காலத்தில் மரியாதை - வண்டிக்காரன்-கூடைக்காரி கூட உங்கள் வெளி டம்பத்தைக் கண்டு மதிப்பார்களேயன்றி உங்களிடம் லக்ஷக் கணக்கான சொத்திருந்தாலும் உங்களை அகௌரவமாய்ப் பேசிவிடுவார்கள். ஊருக்காக்வே சில வேஷம் போடவேண்டியிருக்கிறது. பணச்செலவின்றி வேஷமில்லை. நேற்று நான் எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டுக் கந்தல் துணியைக் கட்டிக்கொண்டு நகையொன்றும் போட்டுக் கொள்ளாமல் காய்கறிக்காரியைக் கூப்பிட்டு சாமான்களின் விலைகளைக் கேட்டேன். "ஆமாம்! நீதான் வாங்குகிறவள்!" என்றுசொல்லிக்கொண்டே போய்விட்டாள். தவிர, நவராத்திரிக்கு ஒரு நண்பர் அழைத்திருந்தார். அங்கேபோனேன். அங்குள்ளோர் மோட்டாரில் வந்தவர்களுக்கு உபசாரஞ் செய்துகொண்டிருந்தார்கள். என்னை ஒருவரும் கவனிக்கவேயில்லை. ஸ்திரீகள் மாகட்டிற்கு நாங்கள் நால்வர் போனோம். எங்களைக் கடைசி ஸ்தானங்களில் உட்கார வைத்தனர். மோட்டாரில் வந்தவர்களை மேடையிலும் முன்பக்கத்திலும் உட்கார வைத்தனர்.

சிவகாமு:— நான் உங்களுக்கு என்ன சொல்ல முடியும்! உங்களுக்குச் செல்வர்களையும், மகான்களையும் போல இன்றே இருக்க வேண்டுமென்ற ஆசை தோன்றியிருக்கிறது. ஊரை அலக்ஷியஞ் செய்யாமலும் நம்வரவிற்கு மேற் போசாமலும் ஒரு சமயம் கஷ்டகாலம் வரும் என்பதைநம்பியும் சிறுகச் சிறுக நம்செல்வம் அதிகரிக்க, அதிகரிக்க நம் சௌக்கியங்களையும் உயர்த்திக்கொள்ள வேண்டும். ஊரார் நம்கஷ்டத்தை நீக்க முன்வர மாட்டார். நம்மிட மிருந்தால் நம்மைப் போற்றுவர். அதற்கு இதற்கு என்று சந்தாவரி வாங்கிக்கொண்டுபோய்விடுவார்கள். நன்றாய்க் கவனித்துப் பாருங்கள். எத்தனை பெரிதா யிருந்த குடும்பங்கள் கேவல நிலையி லிருக்கின்றன! குடும்பச் சீரைக் காப்பாற்றல் மிக நுட்பமான விஷயம். இது ஆய்ந்த ஆலோசனை பண்ணினால் மட்டும் தெளிவாகும்.

கே. எஸ். முத்துசாமி.



சாலி 1853, கலி 5032, ஆங்கிலம் 1931, பிரஜோற்பத்தி வருஷம் ஆடி மாதப் பஞ்சாங்கம்

| சுலுக்கு | ஆங்கிலம் | தமிழ் | வாரம் | திதி | நா | வி | நக்ஷத்திரம் | நா | வி | யோகம் | நா | வி | கரணம் | நா | வி | தியாஜ்யம் நா | வி | அமிர்தாதி யோகம் | நா | வி | | யோகினி | வார சூலை | விசேஷதினங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 7 ரபியுலவ்வல் | 23 ஜூலை | 8 ஆடி | வியா | [illegible] | 42 | 30 | சுவா | 21 | 48 | சாத் | 9 | 4 | பாலவ | 14 | 51 | 32 | 25 | அ | 21 | 48 | இ | சி—பு | தெற் | ஓடு உபதேசம் பெற. |
| 8 | 24 | 9 | வெள் | [illegible] | 38 | 16 | விசா | 19 | 4 | சுப | 2 | 10 | தைதூ | 10 | 28 | 28 | 50 | இ | 60 | 0 | … | | தெற் | நகரப் பிரவேசம் செய்ய. |
| 9 | 25 | 10 | சனி | [illegible] | 34 | 29 | அநு | 17 | 18 | சுப் | 56 | 12 | | | | 31 | 0 | | | | | இ—வ | கிழ | |
| 10 | 26 | 11 | ஞாயி | [illegible] | 32 | 15 | கேட் | 16 | 51 | பிர | 50 | 36 | வணி | 6 | 22 | 35 | 32 | ம | 16 | 51 | … | வ—அ | மேற் | கரிசுவேள், சுபம் நீக்க. சுப்ரமண்ய தரிசனம். |
| 11 | 27 | 12 | திங்க | [illegible] | 30 | 40 | மூல | 16 | 18 | ஐந் | 47 | 19 | பவ | 3 | 22 | 42 | 24 | இ | 60 | 0 | அ | அ—நி | கிழ | பிரதோஷம். |
| 12 | 28 | 13 | செவ் | [illegible] | 30 | 29 | பூரா | 17 | 29 | வைத் | 48 | 52 | கௌல | 1 | 27 | 37 | 6 | இ | 17 | 29 | … | நி—தெ | வட | கனுக்கியத்தில் கொட்ட. |
| 13 | 29 | 14 | புதன் | [illegible] | 31 | 39 | உத் | 20 | 24 | விஷ் / பிரீ | 41 / 40 | 39 / 16 | கர / பத் | 3 / 2 | 24 / 4 | 31 | 0 | அ | 20 | 24 | இ | தெ—மே | வட | காமகாரணம் செய்ய. |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | சு |
| | இச்சக்கரம் ஆடி மீ 1உ சூரிய உதய காலத்திற்குச்சரியாயுள்ளவைகள் | | குரு-சு |
| | | | பு |
| சனி | | | கேது அங் |

### கிரக பாத சாரங்கள்

சூரியன்.— 8உ 28-16க்கு பூசம் 2-ல்.
11உ 58-35க்கு „ 3-ல்.
குஜன்.— 12உ 29-16க்கு உத்திரம் 3-ல்.
புதன்.— 10உ 14- 6க்கு மகம் 2-ல்.
13உ 8-46க்கு „ 3-ல்.
குரு.— 9உ 2-36க்கு பூசம் 3-ல்.
சுக்.— 8உ 28-13க்கு புனர்பூசம் 2-ல்.
11உ 13-26க்கு „ 3-ல்.
13உ 57-55க்கு கடகம் 4-ல்.
சனி.— வக்கிரம் பூராடம் 2-ல்.
ராகு.— உதயம் உத்திரட்டாதி 4-ல்.
கேது.— அஸ்தம் 2-ல்.

பாலகணிதர்,

அ. பே. முத்து ஜோதிடர்,

321, ஐரோட், திருவல்லிக்கேணி, சென்னை.

Edited & Published by T. V. Kalyanasundaran; Printed by T. V. Volaganathan at the Sadhu Press, 12, Ganapathi Mudali St., Royapettah, Madras.

